உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீ மறைஞானசம்பந்தர்

திருவுருவம்

# ஸ்ரீ குமர குருபரர்

தொகுதி 4 ஆவணி பகுதி 11

## கயிலை மலையானே! போற்றி!

ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் திருக்கயிலாய யாத்திரையை இனிது நிறைவேற்றி யுள்ளார்கள். சில தினங்களில் திருப்பனந்தாளுக்கு விஜயம் செய்தருள உள்ளார்கள். இப்பெரும் புனிதப்பயணத்தைமேற்கொண்டு திருவருள் நோக்கத்துடன், நாமெல்லாம் உய்ய அருள்பாலிக்க எழுந்தருளும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் பொன்னர் திருவடி தொழுது, ஆசிரியர்குழு, வாசகர் சார்பில் வாழ்த்திப் போற்றி வரவேற்பு உரைப்பது பெரும் மகிழ்ச்சிச் செய்தியாகும்.

பண்டார மும்மணிக்கோவை இருபதாம் செய்யுளின் இடையிலே ஒரு சுவையான சிறுகதை இருக்கிறது. அதை வருணனைக் கதை என்று சொல்லலாம். அதனைத் தத்துவார்த்தத்துடன் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கியருளியுள்ளார்கள்.

'எந்தக் கடவுளைத் தொழுதாலும் முடிவில் அருள் செய்பவன் ஒருவனே; வடிவம் எதுவானல் என்ன?' இந்தப் பொதுமைச் சித்தாந்தம் பொதிந்த பாடலை வாகீசகலாநிதி திரு கி. வா. ஜ. அவர்கள் யாவரும் ஒத்துக் கொள்ளுமாறு இந்த இதழில் எழுதியுள்ளார்கள்.

பேரறிஞர் திரு. மு. அருணசலம் அவர்கள்சைவசித்தாந்தம்பற்றிய கட்டுரை எழுதியுள்ளார்கள். சாத்திர நூல் வரலாறுகளைத் தெளிவு செய்கிருர்கள். சாத்திரம் கூறிய நூல்கள் சிலவற்றை, நம் முன்னேர்கள் தொகுப்பில் சேர்க்கவில்லை. அதற்குக்காரணம் என்ன என்பன போன்ற வினக்களுக்கு ஆய்வுப்பயனுன அரிய விடைகளை அக்கட்டுரையுள் அறிவித்துள்ளார்கள்.

திரு. முருத. சுவாமிநாதன் அவர்களின் மாணிக்கத் தீங்கனி என்ற வருணனைக் கட்டுரை வெளிவந்துள்ளது.

மற்றும் வழக்கமான அம்சங்கள் இந்த இதழுக்கு அணி செய்கின்றன.

நி—ஆ—ர்

உ
சிவ சிவ

# திருச்சிராப்பள்ளியில்
# இன்னிசைத் திருமுறை விழா

(ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு ஸ்ரீதாயுமான ஈசர் நிதி
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
**ஸ்ரீல ஸ்ரீ காசிவாசி**
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது
துந்துபி ஆண்டு ஆவணித்திங்கள் 13 ஆம் நாள் 29—8—82
ஆவணி மூலம் ஞாயிற்றுக்கிழமை இரவு 8 மணிக்கு
**ஸ்ரீ தாயுமானவர் சன்னதியில் தொடங்கப்பெறும்.**

1. திருமுறைவாணர்கள்:--
   தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திரு. டி. எம். விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்,
   திருவாவடுதுறை.
2. தேவார இசைமணி
   திரு. எஸ். முத்துக்கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சி.
3. தேவார இசைமணி
   திரு. ப. ராமச்சந்திர ஓதுவார், விருத்தாசலம்.
4. இன்னிசைமாமணி, சங்கீர்த்தனரத்ன தேவார இசைமணி
   திரு. திருஞானசம்பந்தம்,
   ஸ்ரீ சட்டநாதசுவாமி தேவஸ்தானம், சீர்காழி.
5. திரு. எஸ். தண்டபாணி தேசிகர், சென்னை.
6. திரு. எஸ். எல். சாமி, பிடில், திருச்சி.
7. திரு. எஸ். ஏ. கோபாலன் – வேய்ங்குழல், சென்னை.
8. திரு. கோ வெங்கட்ராமன் - மிருதங்கம், திருப்பனந்தாள்

By order of His Holiness
முத்து. மெய்கண்டதேவன்,
மானேஜர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

---

குறிப்பு: மேற்கண்ட நாளில் நிகழ்த்தப்பெறும் பிற அறங்கள்.

1. சிதம்பரத்திலும், மதுரையிலும், திருச்செந்தூரிலும் அன்னம் பாலிப்பு.
2. திருநள்ளாற்றில் ஸ்ரீதர்ப்பாரண்யேசுவரர்க்கு விசேஷ அபிஷேக ஆராதனை.
3. காஞ்சிபுரத்தில் திருவேகம்பப் பெருமானுக்கு விசேஷ புனுகு தைலாபிஷேகம். சிவாச்சாரியர்களுக்கு அன்னம்பாலிப்பு.
4. மதுரையில் ஸ்ரீசொக்கலிங்கப் பெருமானுக்குச் சந்தன மெய்ப்பூச்சு
5. பழனியில் சாதுக்களுக்கு அன்னம்பாலிப்பு.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



****************************

# அருள் பழுத்த கனிச் சுவை

****** **********************

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 21-ஆவது அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

திருவாரூர், ஞானப்பிரகாசரின் அவதாரத்தலம். அவர் கமலை ஞானப்பிரகாசர் என்றே அழைக்கப்பெற்றார். கமலை என்பது திருவாரூர். கமலை எனப்படும் திருவாரூரைக் காக்கும் ஞான குருவாகிய ஞானப்பிரகாசரே என்று தம் குருநாதரை ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் அழைக்கிறார்கள்.

தம் குருநாதரைச் சிவனாகவும், ஞானப்பிரகாசராகவும் ஞானசம்பந்தராகவும் முன்னும் பல இடங்களில் விளித் திருப்பதைக் கண்டுள்ளோம்.

திருவாரூரில் அழகான மதில்கள் உள்ளன. மதில்என்று நாம் வழங்கும் சொல்லை 'மதிள்' என்று இலக்கியக் கர்த் தாக்கள் பிரயோகிக்கிறார்கள்.

அணிமதிள் கமலை
நன்னகர் புரக்கும் ஞான தேசிக!
என்பது இப்பாடலில் உள்ள ஏழாவது விளியாகும்.

இந்த விளிக்கு முன்னுல் பதின்மூன்று அடிகளால் திருவாரூரின் சிறப்பைக் கூறுகிருர்கள்

திருவாரூரின் மாளிகைகளில் பளிங்கினுல் அமைந்த நிலாமுற்றங்கள் உள்ளன. பெண்கள் அங்கே விளையாடு வார்கள், அந்தப் பெண்கள் செல்வ வளம் மிக்கவர்கள் என்பது சொல்ல வேண்டுவதில்லை. அவர்கள் ஒளி உமிழும் அரிய அணிகலன்களை அணிந்திருப்பார்கள். விளங்கிழை, சேயிழை என்பன போன்ற சொற்களெல்லாம் நல்ல அணிகலன்களை அணிந்த பெண்களைக் குறிக்கும் சொற்கள்.

எப்போதும் மலர்களை அணிவதால் மலர்களிலுள்ள தேன்வழியும் கூந்தலும், குவளை மலர் போன்ற கூர்மை யான விழிகளும், தாமரை போன்ற முகமும் கொண்ட வர்கள் அந்தப் பெண்கள். பளிங்குநிலாமுற்றத்தில் அவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

சில ஆடவர்கள் அங்கு வந்து பார்த்தார்கள். பளிங்கு நிலாமுற்றத்தைக் குளம் என்று நினைத்தார்கள். அப்பெண் களின் கூந்தலைக் குளத்தில் படர்ந்த பாசி என்று நினைத்தார்கள். கண்களைக் குவளை மலர்கள் என்று கருதினுர்கள். முகத்தைத் தாமரை மலர்கள் என்றே உணர்ந்தார்கள். மொத்தத்தில் அது நீர்நிலைதான் என்பது அந்த ஆடவர்களின் முடிவு.

அமர்ந்த படியாக விளையாடிக்கொண்டிருந்த பெண்கள் சிலர் எழுந்தார்கள். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஆண்களுக்கு ஆச்சர்யம் தாங்கமுடியவில்லை. ''குளத்தி லிருந்து எழுந்து வரும் இவர்கள் நிச்சயமாகத் தேவலோ கத்துப் பெண்களாகத்தான் இருக்க வேண்டும். நீரில்

வதியும் தெய்வப் பெண்களை நீரரமகளிர் என்று சொல்லு வார்கள். ஒருவேளை இவர்கள் அந்த வகையைச் சார்ந்த பெண்கள்தானோ? என்று சந்தேகப்பட்ட அந்த ஆண்கள் ''எதற்கும் அவர்களையே கேட்போமே'' என்ற முடிவுக்கு வருகிறார்கள்.

''பெண்களே! வருக! வருக! நீங்கள் மென்மையான கூந்தலைக் கொண்ட தேவலோகத்துப் பெண்கள். ஆகையினால் நீரில் நிற்கிறீர்களா? அதுசரி. நீங்கள் தேவ லோகத்துப் பெண்களில் எந்த வகையைச் சார்ந்தவர்கள்? விரைவில் எங்களுக்குச் சொல்லுங்கள்!'' என்று அவசர அவசரமாக அந்த ஆண்கள் பளிங்கு நிலாமுற்றத்துப் பெண்களைக் கேட்டார்கள். அப்படிக் கேட்டபோது கேட்கும் ஆண்களிடம் அளவுகடந்த மகிழ்ச்சி நிலவியது. தாம் தேவலோகத்துப் பெண்களிடம் பேசுவதாகப் பூரிப்பு அவர்களுக்கு. அப்படிப் பூரிப்பு அடைந்தார்களே தவிர, அதற்காக ஆணவத்துடன் கேட்கவில்லை. விஷயங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற வேட்கையின் அடிப் படையில் யாசிப்பது போலவே பணிவுடன் அவர்கள் பேசினார்கள்.

ஆடவர்கள் கேட்ட இந்தக் கேள்விக்குப் பளிங்கு நிலாமுற்றத்தில் விளையாடிக் கொண்டிருந்த அந்தப் பெண்கள் வார்த்தைகளால் பதில் சொல்லவில்லை. மிக மெல்லச் சிரித்தார்கள். சிரிக்கும்போது ஓசை எழவில்லை; பற்களும் தெரியவில்லை. உதடுகள் நீண்டு முகம் விரிந்து அதனால் சிரிப்பின் குறிப்பு வெளிப்படுதலைக் குறுநகை என்று சொல்லுவார்கள்.

அந்தச் சிரிப்பின் பொருள் அந்த ஆண்களுக்குப் புரிந்தது. இவர்கள் மண்ணுலகத்துப் பெண்கள் தான் என்று உணர்ந்து கொண்டார்கள்.

'நீங்கள் தெய்வலோகத்துப் பெண்களில் எந்த வகையினர்' என்று ஆண்கள் கேட்டார்கள். 'தெய்வ லோகத்துப் பெண்களா' என்று கேட்டிருந்தாலும் 'இல்லை' என்று பதில் சொல்லி இருக்கலாம். தெய்வலோகத்துப் பெண்களே என்ற முடிவுக்கு வந்து அவர்களில் எந்த வகையினர் எனப் பணிவுடன் கேட்கும் ஆண்களிடம் 'நாங்கள் தெய்வலோகத்துப் பெண்களே இல்லை' என்று பதில் சொல்லியிருந்தால் கேட்ட ஆண்களுக்கு அவமான மாகியிருக்கும். தலை குனிந்திருப்பார்கள், ஆண்களின் தலை குனிவுக்குப் பெண்கள் காரணமாக இருக்கக் கூடாது. அது தவறு, எனவேதான் ஒரு புன்முறுவல் பூத்து நாங்கள் மண்ணுலகப் பெண்களே என்று தெரிவித்தார்கள். அது மிகமிக நாகரிகமான பதில். ஞானப்பிரகாசர் அவதரித்த தலத்திலே இளைய ஆண்களுக்கும் பெண் களுக்கும் அவ்வளவு பண்பாடு - நாகரிகம் இருந்தது என்பதை விளக்கவே ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இப்படி யொரு கதைபோன்ற கற்பனைப் பகுதியை அமைத்தார்.

இக் கருத்தமைத்த பாடற்பகுதி வருமாறு:-

பளிங்கினில் குயின்ற பனிநிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட்டு அயர்தரக்
கொங்குவார் குழலும் குவளைவாள் விழியும்
பங்கய முகமும் பத்திபாய்ந்து ஒளிர்தலின்
சைவலம் படர்ந்து தடம்கயல் உகளும்
செய்யபூங் கமலச் செழுமலர் ஓடைஎன்று
ஆடவர் சிற்சிலர் நாடினர் காணூஉ
வம்மின் வம்மின் மடந்தையர் நீவிர் மற்று
எம்மெல் ஓதி அரம்பையர் ஆதலின்
நீர்நிலை நிற்றிரால் நீர்அவர் தங்களுள்
யார்கொல் யார்கொல்? இசைமின் இசைமின்! என்று

இறும்பூது எய்தி இரந்தனர் இசைப்ப
மறுமொழி கொடாது குறுநகை முகிழ்த்துஆங்கு
ஐயுறவு அகற்றும் அணிமதிள் கமலை
நன்னகர் புரக்கும் ஞான தேசிக!

[குயின்ற - செய்யப் பெற்ற; பனி-குளிர்ந்த. விளங்கிழை-ஒளிவிடும் அணிகள்; மடந்தையர்-பெண்கள்; விளையாட்; டயர்தர - விளையாடுதலை மேற்கொள்ள; கொங்கு - தேன்; குழல் - கூந்தல்; பங்கயம் - தாமரை; பத்தி - வரிசை; சைவலம் - பாசி; உகளும் - பிறழும்; செய்ய - சிவந்த; காணூஉ - கண்டவாறே; வம்மின் - வருக; ஓதி - கூந்தல் அரம்பையர் - தேவர் உலகப் பெண்கள்; நிற்றிரால் - நிற்கிறீர்கள்; யார்கொல்- யார்; கொல் - அசை. இறும்பூது - பெருமகிழ்ச்சி; இரந்தனர் - யாசிப்பவர்போல; இசைப்ப - கேட்க; முகிழ்த்து - உண்டாக்கி; ஐயுறவு-சந்தேகம்; மதிள்-மதில்; கமலை - திருவாரூர்; புரக்கும் - காக்கும்.]

இப்பாடலின் இறுதியில் தம் குருநாதரிடம் ஸ்ரீ சுவாமிகள் வேண்டுகிற 'சமயம் தீர்ந்த தனிப்பொருள்' எது என எனக்கு அறிவிக்க வேண்டும்' என்னும் வேண்டுதலுக்குக் கமலை ஞானப்பிரகாசரே என்னும் விளி மிகப்பொருத்தமானது. நிலாமுற்ற மகளிரை நீரரமகளிர் எனத் தடுமாறி உணர்ந்தது கூறியது சமயம் தீர்ந்த தனிப் பொருளிலும் நம் உணர்வுக்குத் தோன்றும் மயக்கத்தைக் கூறியது.

கமலை ஞானப்பிரகாசராசக் குருநாதரை விளித்த ஸ்ரீகுமர குருபர சுவாமிகள் அவர்கள், பின்னர் மாசிலாமணி என்றும், ஞானசம்பந்த என்றும் விளிக்கிறார்- மாசிலாமணியாகிய ஞானசம்பந்த என ஒருவிளியாகவும் கொள்ளலாம்.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்கள் பூரணசந்திரன். பூரணசந்திரன் என்றால் அதிலிருந்து நிலாஒளி வருமே! மாசிலாமணி என்ற பூர்ண சந்திரனிலிருந்து புகழ் என்ற நிலாஒளி வருகிறது.

புகழ் வரும் வழிகள் பலஉண்டு. அதில் குற்றமான வையும் உண்டு. போர்த் தொழிலால் மன்னர்கள் பெறும் புகழைக் குற்றமற்ற புகழ் என்று வர்ணிக்க முடியாது. தவம், அறம் முதலியவற்ருல் பெறும் புகழ் குற்றமற்ற புகழ். ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்களின் புகழ் குற்ற மற்ற புகழாகும். புகழின் வலிமை அதன் நிலேபேற்றில் இருக்கிறது. அவருடைய புகழ் நிலேத்த புகழ். எனவே அது வண்புகழ் ஆகிறது.

ஆசிலா வண்புகழ் அணிநிலா எறிக்கும்
மாசி லாமணி! ஞானசம பந்த!

[ஆசு - குற்றம்; ஆசு + இலா = ஆசிலா; வண் - வலிமை; அணி - அழகு ]

— சிவ சிவ



சீனத் தத்துவ ஞானி 'லவட்ஸு' அறவுரைகள்

# 67. மூன்று பொக்கிஷங்கள்

தமிழாக்கம் : கோ. வன்மீகநாதன்

[டௌவைப் பற்றி] நான் போதிப்பது மடமையை ஒத்திருக்கிறது
என்று உலகம் முழுவதும் கூறுகிறது
ஆம் அது மிகச்சிறந்ததாய் இருக்கும் காரணத்தால் மடமையை
ஒத்திருக்கிறது
அது மடமையை ஒத்திருக்காவிட்டால், அது நெடுங்காலத்திற்கு
முன்னதாகவே துச்சமாய், அல்பமாய்ப் போயிருக்கும்
என்னிடம் மூன்று பொக்கிஷங்கள் இருக்கின்றன;
அவற்றைக் காவல் இட்டுப் பத்திரமாக வைத்திருங்கள்
முதலாவது அன்பு[1]
இரண்டாவது, என்றுமே எதுவுமே அபரிதமாக செய்யாதே
மூன்ருவது ஒரு பொழுதும் உலகத்தில் முதல்வனாக இருக்காதே
அன்பின் மூலமாக ஒருவன் அச்சத்தை அழைக்கின்ருன்,
அச்சமில்லாது இருக்கின்ருன்[2]
மிதமிஞ்சி எதையும் செய்யாததால், ஒருவன் ஆற்றல் வளம்
அதிகமாய் உடைத்தாய் இருக்கிருன்
உலகத்தில் முதல்வனாக இருப்பதற்கு முனைந்துகொண்டு முந்தாததால்
ஒருவன் தன்னுடைய திறத்தை விருத்தி செய்யலாம், அதனை
முதிர்ந்த பக்குவம் அடையச் செய்யலாம்;
ஒருவன் அன்பையும் அஞ்சாமையையும் செலவிடுவானாயின்
தன்னடக்கத்தையும் ஆற்றல் சேமிப்பையும் கைவிடுவானேயானுல்
ஒருவன் மற்றவர்களைப் பின்பற்றிச் செல்வதைக் கைவிட்டு
முந்திக்கொண்டு ஓடுவானேயானுல்
அவன் ஒழிந்தான், நாசமடைவான்.
ஏனெனில் அன்பானது தாக்கப்படும்போது வெற்றிகரமாகவும்
தற்பாதுகாப்பு செய்துகொள்ளும் நிலையில் இருக்கும்போது
வெல்ல முடியாததாகவும் இருக்கிறது
எவரை நாசமுறக்காணத் தான் விரும்பவில்லையோ அவர்களுக்குத்
தெய்வம் அன்பைப் படைக்கலமாக அளிக்கிறது.

---

1 ஒப்பிடுக-திருக்குறளின் எட்டாம் அதிகாரமாகிய அன்புடைமை

2 இறைவன்பால் அன்பு நிறைந்திருந்த காரணத்தால் அப்பர் பெருமான் ''நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்'' என்ருர்.

## ௬௮. எவருடனும் போட்டி இடாமை, என்ற பண்பு

தைரியமான படைவீரன் வன்முறையாக நடந்து கொள்வதில்லை
ஒரு சிறந்த மல்யுத்தம் செய்பவன் தன் பொறுமையை இழப்பதில்லை
ஒரு நாட்டை வென்ற மகா புருஷன் சில்லரை விஷயங்களைப் பற்றிச் சண்டை போடுவதில்லை
மனிதர்களைச் சிறந்த முறையில் பயன்படுத்துபவன் தன்னை மற்றவர்களுக்குக் கீழாக வைத்துக் கொள்வான்

இதுதான் போட்டியிடாமை என்ற பண்பு
இதுதான் மனிதர்களைச் சிறப்பாகப் பயன்படுத்தும் திறமை எனப்படும்

இதுதான் இறைவனுடன் புணர்ச்சிப்பட்டு இருப்பதில் உள்ள உன்னதமான நிலைமை எனப்படும்
இதுதான் பண்டையகாலந்தொட்டு இருந்துவந்த பண்பு

## ௬௯. மறைப்பு சாதனம்.

போர்படை சூழ்ச்சி நிபுணர்களின் கொள்கை ஒன்று இருக்கிறது
படையெடுப்பதற்கு முந்துபவனாக இருப்பதற்கு நான் துணியமாட்டேன் மாறாக, படைஎடுக்கப்படுபவனாக இருக்க விரும்புவேன்

ஒரு அங்குலம் கூட முன்னால் அடியெடுத்து வைக்கத் துணியமாட்டேன்; அதற்கு மாறாக ஒருஅடி பின்வாங்குவதற்குத் தயாராக இருப்பேன்

அதாவது அணிவகுக்காமல் முன்னேற,
சொக்காய்களின் கைகளை மடக்கிவிட்டுக் கொண்டு சண்டைக்கு முஸ்தீப்பாக

நேர்முகமாகத் தாக்காமல் இருக்க
படைக்கலன்கள் இன்றி ஆயுதபாணிகளாக

[இதுவே போர்ப்படை சூழ்ச்சி நிபுணர்களின் கொள்கை]

எதிரியைத் தரக்குறைவாக எடை போடுவதைப்போலப்
பேரிழவு வேறு யாதொன்றுமில்லை
எதிரியைத் தரக்குறைவாக எடைபோட்டால் என்னுடைய
பொக்கிஷங்களை இழப்பதுதான் விளையும்
ஆகையால் ஒத்த பலமுள்ள இரு படைகள் எதிர்த்து
நிற்கும்போது
மனவேதனைப் படுபவனே[1] வெல்வான்.

1. அதாவது கொல்லுவதை வெறுக்கும் படைத்தலைவன்.

## 70. அவர்கள் என்னை அறியார்கள்

என் போதனைகள் புரிந்து கொள்வதற்கு மிக எளியவை, பயில்வதற்கு
மிக எளியவை
ஆனால் எவராலும் அவற்றைக் கொள்ள முடியாது, எவராலும்
அவற்றைப் பயிலமுடியாது
என் சொற்களில் ஒரு கொள்கை, ஒரு அடிப்படைத் தத்துவம்
அடங்கியுள்ளது
மக்களுடைய விவகாரங்களில் ஒரு நடைமுறை இருக்கின்றது
அவர்கள் இவற்றை அறியாத காரணத்தால்
என்னையும் அவர்கள் அறிவதில்லை
என்னைப் புரிந்து கொண்டவர்கள் மிகச்சிலரே ஆதலால்
நான் புகழ் பெற்றவனாய் இருக்கின்றேன்
ஆகையால் ஞானியானவன் தன் உடலின் மீது ஒரு முரட்டுத் துணியை
அணிந்திருக்கிறான்
ஆனால் அதனுள் தன் மார்போடு அணைத்து விலையுயர்ந்த
ஜேட் என்ற கல்லைத் தூக்கிச் செல்கிறான்.

## 71. நோயுற்ற மனப்பான்மை

எவனொருவன் தனக்குத் தெரியாதென்று தெரிந்து
வைத்திருக்கின்றானோ அவன் எல்லோரினும் மேலானவன்
எவனொருவன் தனக்குத் தெரியாததைத் தெரிந்திருப்பதாக (பாசாங்கு
செய்து) நினைக்கின்றானோ அவன் நோயுற்ற மனம் கொண்டவன்
எவனொருவன் நோயுற்ற மனப்பான்மையை, நோயுற்ற மனப்பான்மை
என்று புரிந்து கொள்கின்றானோ அவன்
நோயுற்றமனம் உள்ளவன் அல்லன்
மெய்ஞானி நோயுற்றமனம் உடையவன் அல்லன்
அவன் நோயுற்ற மனப்பான்மையை நோயுற்ற மனப்பான்மை
என்று புரிந்து கொள்ளுகின்ற காரணத்தால்
அவன் நோயுற்ற மனம் இல்லாதவனாய் இருக்கிறான்.

# பரம்பொருள்

கி. வா. ஜகந்நாதன்

உலகத்தில் உள்ள பல்வேறு சமயவாதிகள் தங்கள் தெய்வமே உண்மையான பரம்பொருள் என்று கூறுகிறார்கள். அவர்கள் வேறு எதையோ பற்றிச் சொல்லாமல் கடவுளைப் பற்றிச் சொல்கிறார்களே; அதுவே பெரிது அல்லவா? ஆதலின் அவர்கள் கூறுவதையெல்லாம், கடவுள் ஏற்றுக்கொள்கிறான். நம்மை இப்படிப் பலவிதமாகச் சொல்கிறார்களே என்று அவன் வெறுப்பதில்லை. நம்மை எண்ணித் தானே இவர்கள் பேசுகிறார்கள் என்று மகிழ்ச்சியை அடைகிறான். எந்த மூர்த்தியாக வைத்து வழிபட்டாலும் அந்த வணக்கத்தை அவன் ஏற்றுக்கொள்கிறான்.

சமயகோ டிகளெலாம்
தம்தெய்வம் எம்தெய்வம் என்று
எங்கும் தொடர்ந்தெதிர்
வழக்கிடவும் நின்றதெது?''

அதுவே பரம்பொருள்; எப்படி வழிபட்டாலும் அது பரம்பொருளையே சென்று சேர்கிறது. 'வானத்திலிருந்து விழும் மழைநீர் எப்படி கடலைச் சேர்ந்துவிடுகிறதோ அப்படி எல்லாத் தெய்வங்களின் வழிபாடும் கேசவனையே சேர்கின்றன' [ஆகாசாத் பதிதந் தோயம் யதா கச்சதி சாகரம், ஸர்வ தேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி] என்று சுருதி சொல்கிறது.

''விரிவிலா அறிவி னோர்கள்
வேறொரு சமயம் செய்தே
எரிவினால் சொன்னா ரேனும்
எம்பிராற் கேற்ற தாகும்''

என்று அப்பர் பாடுகிறார்.

''அறுவகைச் சமயத் தோர்க்கும்
அவ்வவர் பொருளாய் வேறாம்
குறியது உடைத்தாய் .........
செறிவொழி யாது நின்ற
சிவன் அடி சென்னி வைப்பாம்''

என்றும்,

யாதொரு தெய்வம் கொண்டீர்
அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாக னார்தாம்
வருகுவர்''

என்றும், சிவஞான சித்தியார் சொல்கிறது.

இவ்வாறு பல சமயத்தாரும் வெவ்வேறு வகையில் கூறும் பரம் பொருள் எதுவோ அதுவே திருவாரூரில் தியாகேசப் பெருமானுக விளங்குகிறது.

இதுவே பொருள் என்று எவர் எவர்
கூறினும்
ஏற்பது எது?

இவ்வாறு சொல்லும் பொருளே பரம்பொருளாகிய சிவபெருமான் என்பதை அறிந்து கொண்டவர்கள் உண்மையை உணர்ந்தவர்கள்.

அதுவே பொருள் என்று அறிந்து
கொண்டேன்.

அந்தப் பொருள் ஒவ்வொரு சமயத்தினர்க்கும் வெவ்வேறு வடிவும் பெயரும் உடையதாகத் தோற்றுவதால் அது எல்லாச் சமயத்தினருக்கும் பொதுவாக நடுநிலைமையில் நிற்பது.

அப்பொருள் எவருக்கும்
பொதுவே என்ருலும் பொருந்தும்

அவரவர்கள் தம் கொள்கைப் படி வழிபட, அவர்களுக்கு அந்தப் பொருள் அருளை வழங்குகிறது. அருளை வழங்குவதனுல் அவர்கள் வழிபாடு பயனுடையதாகிறது. செய்தொழிலைப் பயனுல் அறிவது சான்ருேர் இயல்பாதலின் அருள் பெறும் காரணத்தால் அத்தகையவர்களுடைய வழிபாடு பரம் பொருளுக்கு ஏற்புடையது என்று தெரிகிறது. அது யாவருக்கும் பொதுவில் நின்று அருள் பாலிக்கிறது.

எல்லோருக்கும் பொதுவாகிய அப்பொருளே பொது என்னும் பெயருடைய அம்பலத்தில் நின்று நடனம் புரிகிறது.

''பொதுநடத் தரசே,
புண்ணியனே''
என்று அருட் பிரகாச வள்ளலார் பாடுகிருர்.

எல்லோர்க்கும் பொதுவில் நிற்கும்;

அவ்வாறு பொதுவாக நிற்கும் பரம்பொருள் தன்னை வழிபடும் அன்பர்களாக உள்ளவர் யாராயிருந்தாலும் அவர் ஊரிலும் எழுந்தருளி நாளும் அருள் பாலித்துக்கொண்டு வீற்றிருக்கும் தேன் பொருந்திய சோலைகளையுடைய ஊர் எதுவாக இருந்தாலும் யாருடைய ஊராக இருந்தாலும், தன்னை வழிபடுவாருக்கு ஏற்ற வகையில் தங்கும்;

மதுஏய் மலர்ப்பொழில் ஆரூரினும்
வைகும் வைகலுமே.

'தேன்பொருந்திய மலர்களையுடைய பொழில் சூழ்ந்த திருவாரூரிலும் நாளும் தங்கும்' என்ற பொருளும் அமைந்தது.

பொதுவில் நிற்கும் என்பதும் ஒரூரினும் வைகும் என்பதும் 'யாவருக்கும் பொதுவாக

நிற்கும்' என்றும், 'யாருடைய ஊரிலும் தங்கும்' என்றும் சமரச உணர்வோடு பொருள்கொள்ளும் படி நின்றன. அவையே, சைவர்களுக்கு ஏற்ற வகையில் 'தில்லையம்பலத்திலே நின்று நடனம் புரியும்' என்றும், 'திருவாரூரிலும் தங்கும்' என்றும் பொருள் கொள்ளும்படி உள்ளன. பொது, ஆரூர் என்னும் சொற்கள் இரு வேறு பொருள்பட்டுச் சிலேடை நயம் உடையனவாய் இருக்கின்றன.

இதுவே பொருள்என்று எவர்எவர்
கூறினும் ஏற்பதுஎது?
அதுவே பொருள்என்று அறிந்துகொண்
டேன்; அப்பொருள் எவருக்கும்
பொதுவேஎன் றாலும் பொருந்தும்; எல்
லோருக்கும் பொதுவில்நிற்கும்;
மதுஏய் மலர்ப் பொழில் ஆரூரி
னும்வைகும் வைகலுமே.

இதுதான் பரம்பொருள் என்று எந்த எந்தச் சமயத்தார் கூறினாலும் அவற்றையெல்லாம் ஏற்கும்பொருள் எதுவோ அதுவே, உண்மையான பரம்பொருள் என்று தெரிந்துகொண்டேன்; அந்தப் பொருள் எந்தச் சமயத்தாருக்கும் பொதுவானது என்றாலும் பொருத்தமாக இருக்கும்; அது யாவருக்கும் பொதுவாக நிற்கும்; (அம்பலத்தில் நின்று நடம்புரியும்); தேனைப் பொருந்திய மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த யாருடைய ஊரிலும் [திருவாரூரிலும்] தங்கி எந்நாளும் அருள்பாலிக்கும்.

[இதுவே : ஏகாரம் பிரிநிலை; தேற்றமும் ஆம். பொருள் – உண்மையான பரம்பொருள்: எவர்எவர் - எந்தஎந்த சமயத்தார். அதுவே: ஏகாரம், தேற்றம். பொதுவில் – பொதுவாக, அம்பலத்தில். மதுவேய் என்று பிரித்து, தேன்ததும்பி மூடிய என்றும் பொருள் கொள்ளலாம். ஆரூரினும் – யாருடைய ஊரிலும், திருவாரூரிலும். வைகலும் – ஒவ்வொரு நாளும். ஏ.காரம், ஈற்றசை.]

பரம்பொருளாக யாவர்க்கும் பொதுவாக உள்ள ஒன்றே தில்லையில் அம்பலவாணனாகவும் திருவாரூரில் தியாகேசனாகவும் கோலம் கொண்டு காட்சியளிக்கிறது என்பது கருத்து.

இது, திருவாரூர் நான்மணி மாலையில் உள்ள 23 - ஆவது பாட்டு.



# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துந்துபி ௵ ஆவணி ௴ (1982 ஆகஸ்டு — செப்டம்பர்)

திதி, நட்சத்திர காலம முடியும நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ் ௳ | ஆங்கில ௳ | | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1 | (17—8—82) | | செவ்வாய் | திரயோதசி 14-22 | புனர்பூசம் 9-12 |
| 2 | (18—8—82) | | புதன் | சதுர்த்தசி 11-14 | பூசம் 6-52 பின் ஆயில்யம் 28-38 |
| 3 | (19—8—82) | | வியாழன் | ●அமாவாசை 8-15 பிரதமை 29-33 | மகம் 26-41 |
| 4 | (20—8—82) | | வெள்ளி | துதியை 27-17 | பூரம் 25-08 |
| 5 | (21—8—82) | | சனி | திரிதியை 25-36 | உத்திரம் 24-10 |
| 6 | (22—8—82) | | ஞாயிறு | சதுர்த்தி 24-37 | அஸ்தம் 23-53 விநாயக சதுர்த்தி |
| 7 | (23—8—82) | ஆகஸ்டு | திங்கள் | பஞ்சமி 24-25 | சித்திரை 24-22 |
| 8 | (24—8—82) | | செவ்வாய் | சஷ்டி 25-02 | சுவாதி 25-38 |
| 9 | (25—8—82) | | புதன் | சப்தமி 26-24 | விசாகம் 27-38 |
| 10 | (26—8—82) | | வியாழன் | அஷ்டமி 28-23 | அனுஷம் நாள் முழுவதும் |
| 11 | (27—8—82) | | வெள்ளி | நவமி நாள் முழுவதும் | அனுஷம் 6-13 |
| 12 | (28—8—82) | | சனி | நவமி 6-47 | கேட்டை 9-12 |
| 13 | (29—8—82) | | ஞாயிறு | தசமி 9-22 | மூலம் 12-19 ஆவணி மூலம் |
| 14 | (30—8—82) | | திங்கள் | ஏகாதசி 11-53 | பூராடம் 15-21 |
| 15 | (31—8—82) | | செவ்வாய் | துவாதசி 14-07 | உத்திராடம் 18-06 |
| 16 | (1—9—82) | | புதன் | திரயோதசி 15-56 | திருஓணம் 20-24 |
| 17 | (2—9—82) | செப்டம்பர் | வியாழன் | சதுர்த்தசி 17-13 | அவிட்டம் 22-12 |
| 18 | (3—9—82) | | வெள்ளி | ○பௌர்ணமி 17-58 | சதயம் 23-29 |
| 19 | (4—9—82) | | சனி | பிரதமை 18-12 | பூரட்டாதி 24-17 |
| 20 | (5—9—82) | | ஞாயிறு | துதியை 17-58 | உத்திரட்டாதி 24-37 |
| 21 | (6—9—82) | | திங்கள் | திரிதியை 17-20 | ரேவதி 24-35 |
| 22 | (7—9—82) | | செவ்வாய் | சதுர்த்தி 16-21 | அசுவனி 24-13 |
| 23 | (8—9—82) | | புதன் | பஞ்சமி 15-04 | பரணி 23-35 |
| 24 | (9—9—82) | | வியாழன் | சஷ்டி 13-32 | கார்த்திகை 22-41 |
| 25 | 10—9—82) | | வெள்ளி | சப்தமி 11-46 | ரோகிணி 21-35 |
| 26 | (11—9—82) | | சனி | அஷ்டமி 9-48 | மிருகசீரிஷம் 20-16 |
| 27 | (12—9—82) | | ஞாயிறு | நவமி 7-38 பின் தசமி 29-18 | திருஆதிரை 18-47 |
| 28 | (13—9—82) | | திங்கள் | ஏகாதசி 26-51 | புன்ர்பூசம் 17-09 |
| 29 | (14—9—82) | | செவ்வாய் | துவாதசி 24-22 | பூசம் 15-26 |
| 30 | (15—9—82) | | புதன் | திரயோதசி 21-56 | ஆயில்யம் 13-44 |
| 31 | (16—9—82) | | வியாழன் | சதுர்த்தசி 19-39 | மகம் 12-09 போதாயன அமாவாசை |

கன்னிக்கு சூரியன் 25- 23

துலாத்திற்கு சனி 6-10-82, 6-33 மணி

விருச்சிகத்திற்கு குரு 25-11-82, 29-57 மணி

*************************

## ஸ்ரீ ஏகாம்பரநாதர் பதிற்றுப்பத்தந்தாதி

*************************

காண வேகருத் தாயடைந்தவர் காணு மாறுனைக் காட்டியே
பேணு வாயவர் தாள்பணிந்திடு பேறெ னக்கினி யருளுவாய்
தாணு வேதிருக் கச்சி மேவிய தத்து வப்பொரு ளேயரி
பாண னேயிஃ தென்னகாரணம் பார்த்தன் வில்லடி பட்டதே. 57

பட்ட பாடுகள் கோடிகோடிகள் படுவ துப்பல கோடியே
சட்ட மேயல தில்லறத்தினிற் கண்ட காட்சியு முண்டரோ
அட்ட மூர்த்தியு மாகியேயிவ் வகில மீன்றரு ளம்மைதன்
பட்ட மத்துரை யேதென்கச்சியிற் பகவ னேபர மேசனே. 58

பரம நாடகம் ஆடி அன்புறு பதஞ்சலிக்கருள் பண்ணவா
புரம தானதை நொடியி லேநகை செய்து வெம்புகைகொண்டவா
வரமெ லாமருள் செய்த கச்சியின் மாவின் நீழ லமர்ந்துளாய்
சிரம மாதிசை நந்தி மீமிசை வந்து சேவைதந் தருளுமே 59

தந்த னன்னுனக் கென்னை யானினித் தான்சுதந்தரமில்லையே
வந்த னன்திருச் சந்நிதிக்கெனில் வாழ்வ தும்பெருவாழ்வதே
நந்த லின்றொளிர் கச்சி மாநகர் நாதனும் கருணாகரா
பந்த மற்றுயர் வீடு மேவுறப் பண்ணலேயுப காரமே. 60

(வேறு)

காரைநிக ரோதியர்கள் சுழலிற் பட்டுக்
கைப்பொரு ளிழந்துபெரு நோயுங் கொண்டு
தேரையது பாம்பின்வாய்ப் பட்டாற் போலச்
சிந்தையும் கலங்கிநான் திகைக்க லாமோ
ஆரையினித் தெய்வமெனக் கொள்வே னுன்னை
அன்றிஒரு தெய்வமுண்டோ அறியேன் நானே
நீரையிருஞ் சடைமுடித்த கச்சிக் கம்பா
நெஞ்சமே கோயில்கொளும் நிலைமை யானே. 61

நிலையிலேன் நிச்சிலேன் நேய மில்லேன்
நேசத்தார் தங்களையும நேசஞ் செய்யேன்
கலையிலேன் கற்றவரைக் கண்டு மில்லேன்
கடையனே னுயிர்பிழைக்குங் கணக்கே தையா
மலையிலே வளர்ந்தபெண்ணை இடத்தில் வைத்த
மாமணியே சேமநிதி வைப்பே வேதன்
தலையிலே பலியேற்குந் திருவே கம்பத்
தாணுவே கந்தனுக்குத் தந்தை யானே. 62

தந்தைதா யில்லாமல் உலகில் யார்க்குந்
தந்தைதா யாகின்ற தன்மை என்னே
முந்தைநான் மறைகளுக்கு மறிய வொண்ணு
மும்மூர்த்தி உருவான முக்க ணப்பா
சிந்தைமேற் குடியிருக்குங் கச்சிக் கம்பத்
தெய்வமே சைவமே சிறியே னுக்கும்
எந்தையே எம்மானே இரங்க கில்லா
ஏழையேன் பிறந்துபிறந் திளைத்திட் டேனே. 63

இளைத்த இடை மடவார்தம் கொங்கை யானைக்
கிடுங்கவள மாகவெனைக் கற்பித் தானே
விளைத்தவினை என்றுசொன்னுல் வினைதா னேது
வினைமுற்றென் வசமல்லால் வேறு முண்டோ
வளைத்தமலை வில்லானே திருவே கம்ப
வான்பொருளே உன்வாழ்க்கை இதுவோகண்டேன்
களைத்துநர கிடைவீழ்ந்தா லுனக்குக் கூடுங்
கருமமுண்டோ தருமமுண்டோ களைக ணுனே. 64

கண்ணுரென் றுதவிடினச் சுடர்தா னென்னக்
கைமலரால் மறைத்திடவுங் கறுத்த நெஞ்சம்
பெண்ணுன தற்கிரங்காய் பிழையே யென்று
பெரும்பூசை தனைக்கொண்டு வெள்ளங் காட்டும்
அண்ணுதென் கச்சியில்வாழ் அமலா வுன்றன்
அருட்பெருமை தனைக்கண்டேன் அதனுல் யாரும்
பண்ணுத பாவத்தைப் பண்ணி நின்றேன்
பயப்பட்டேன் திருவுளந்தான் பரிந்தி டாயே. 65

பரிவதிலைப் பதைப்புமிலை பத்தி யில்லை
பாவனையு மில்லைமரைப் பரித்துப் பூசை
புரிவதிலை திருமுன்பு நின்று போற்றிப்
புகழ்வதிலை இருவினைகள் போக வேரை

அறிவதிலே யடியவரை அணைவ தில்லே
அவர்நீக்கிப் பொல்லாரை யப்பாற் செல்லப்
பிரிவதிலே ஏகம்பா அடியேன் வீணுப்
பேசியே பேசியே பிணங்கினேனே. 66

பிணங்காட்டிற் சடங்கண்டு மாந்த ரெல்லாம்
பின்னுமந்தப் பொடிசார்ந்த வாழ்வை நம்பி
அணங்காட்டல் போலாடிச் சிவிகை ஏறி
ஆனைபரிசேனையுடன் அவனி ஆண்டு
பணங்காட்டும் அல்குலார் மதபேற் கொண்டு
பரமாத்த மிலராகிப் பவத்தை நீங்கார்
கணங்காட்டும் கயிலேநிகர் காஞ்சி மேவுங்
கம்பலே யவர்களென்னுல் கற்று ளாரே. 67

கற்றுளா ருன்புகழே கற்க வேண்டும்
கடந்துளார் பிறப்பதனைக் கடக்க வேண்டும்
பற்றுளா ருன் கழலே பற்ற வேண்டும்
பரிவுளா ருன் றனேயே பரிய வேண்டும்
பெற்றுளா ருன்னருளே பெறுதல் வேண்டும்
பேச்சுளார் உன் நாமம் பேச வேண்டும்
மற்றுளா ரென்னுவார் கச்சிக் கம்ப
வாணனே யவர்பிறப்பை வழுத்து மாறே. 68

வழுத்தாத வாக்குமொரு வாக்க தாமோ
வணங்காத தலேயுமொரு தலேய தாமோ
அழுத்தாத நெஞ்சமொரு நெஞ்ச மாமோ
அன்பிலா மெய்யுமொரு மெய்ய தாமோ
கொழுத்தாது மலரிதழி முடியாய் எங்கள்
கோமானே உமைதழுவக் குழைந்த கம்ப
எழுத்தாறு படைத்தருளுஞ் சேயை யீன்ற
எம்மிறையே கைம்மலேயை ஈன்ற கோவே. 69

கோமானும் வேறுளரோ வுன்னே யல்லாற்
கொடுவிடம்வந் துற்றபொழு தயன்மா லிந்ரன்
மாமானுங் கலேமானுஞ் சசியுந் தங்கள்
மாங்கலியம் களத்திருக்க வாழச் செய்த
பூமானே கச்சியில்வாழ் புனித மூர்த்தி
புண்ணியனே புராந்தகனே போரார் மூலந்
நீமான்சேர் திருக்கரத்தாய் கம்பை ஆற்றிற்
திருமேனி கொண்டருளுந் திருவினுனே. 70

[வேறு]

திருவை அறிவைத் தெள்ளமுதைத் தேமாங்கனியைச் செழுப்பாகை
உருவை யருவை உருவருவை ஒளியை யளியைப் பரவெளியை
கருவை யகறறுங் கணணுதலைக் கச்சித் திருவே கம்பமுறுந்
தருவை மருவுந் தரமெளிதோ தமியேன் பெற்ற தனிமயிலே. 71

மயிலே மருவு மணிப்புறவே வளமார் காஞ்சி மறைமாவிற்
குறிலே மறுகிற் குலவனமே கொடியே னுதவுங் கொடியிடைதான்
துயிலே உணவே தொடிவளையே துறந்தே யயருந் துயரமெலாம்
பயிலே றழகர் திருவேகம் பரத்தர்க் குறுமா பகரீரே. 72

பகர்வாரு ளரோ என்னொருவன் படும்பா டனைத்தும் படுமதனல்
அகழ்வா ரிதியாற் றென்றலினல் அழல்போற் கொழுந்து மம்புவியால்
பகழ்வார் புகழுந் திருக்காஞ்சிப் பதிமா நிழலிற் புண்ணியனர்
நெகிழ்வா ருளங்கொள் நிருமலனர் நெகிழா தணைவான் நெடுந்தினமே

தினமே வறிதிற் கழித்துழலுஞ் சிறியோர் தமைச்சேர்ந் தின்னலுறும்
மனமே மடவா ராசையெனும் வலையில் மான்போல் மயங்காதே
கனமே வளரும் பொழிற் காஞ்சிப்பதியாண் டருள்வோன் கனைகழலாந்
தனமே உறுமா றுறங்காமற் தவஞ் செய்திருத்தற் றவமன்றே. 74

அன்றே யின்றும் புரந்தாளும் அரையே யமரர் புகழ்ந்தேத்து
மன்றே யிலய சித்தொரு நான் மறைமா நிழலும் மருண்டயருங்
கன்றே யனைய வடிவர்தங் களமுங் கோயில் கொண்டருளு
ஒன்றே யுன்றன் அடியல்லா[து] உன்கா தென்றன் உள்ளமதே. 75

உள்ளல் போலும் உள்ளுவர்தம் உளத்தி னொளியை உவந்துதவும்
வள்ளல் போலும் அடியேற்கு வரையா தருளும் வான்தருவைப்
பொள்ளல் போலு முடற்படுமுன் பொழிலார் கச்சிக் கம்பனையுட்
கொள்ளல் போலுங் குவலயத்தில் குறிக்கும் பெரியோர் குணத்தானே

குணக்கிங் கெடுப்பார் யாவர்கொலோ குரைநாய் வாயிற்
கொடுமனனே
பிணக்கிங் கொழியாய் பித்தொழியாப் பேய்போற் றிரிவாய்
பிறைசூடுங்
குணக்குன் றனையான் சகலசித்தி யெனுமா நிகரிற் குலமலர்கள்
மணக்குங் குழலாள் மணவாளன் மகிழ்வா யருளும் வகையாதே. 77

# சித்தாந்த சாத்திரங்கள்

## மு. அருணாசலம்

**1 – திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் :-**

சித்ததாந்த சாத்திரங்கள் பதினான்கு என்பதையும் அவை யாவை என்பதையும் முன்னர் விளக்கமாகக் கூறினோம். அவற்றுள் எழுப்பப்பட்ட சில ஐயங்களைப் பின்னர்த் தெளிவுபடுத்துவோம். மேலும் சித்தாந்த சாத்திரங்கள் மெய்கண்ட சாத்திரங்கள் என்றும் பெயர்பெறுகின்றன. இப்பெயர் எவ்வாறு பொருந்தும் என்பது சிந்திக்கத்தக்கது. முன் கூறிய ''உந்தி களிறு'' என்ற பாடல் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கின் பெயர்களை வரிசையாகச் சொல்லும்போது, உந்தி களிறு என்ற இரண்டையும் முதலாக வைத்துப் பின்னர் போதம் சித்தி இருபா என்று சொல்லிக்கொண்டு போகிறது.

மெய்கண்டார் செய்த சிவஞான போதம் இந்த நிரலில் மூன்றாவது நூலாகச் சொல்லப்பட்டுள்ளது இந்தச் சாத்திரங்கள் மெய்கண்ட சாத்திரம் என்று வழங்கப்படுமானால் போதத்தை முதலாக வைத்துச் சொல்லவேண்டும்; அப்படி எங்கும் சொல்லு வதில்லை. மெய்கண்டாருடைய காலம், கோபிநாதராயர் எடுத்துக் காட்டிய ஓர் ஆராய்ச்சிக் குறிப்பை வைத்து கி. பி. 1232 என்று ஆராய்ச்சியாளர் அனைவரும் ஒருமுகமாகச் சொல்லி வருகின்றார்கள். சம்பிரதாயப்படி உந்தி களிறு இரண்டின் காலம் கி. பி. 1148 – 1178 என்று சொல்லுவது மரபாக இருக்கிறது. இங்கு இரண்டு ஐயங்கள். ஒன்று மெய்கண்டார் காலம் 1232-தானா? என்பது. இரண்டு உந்தி களிறு மெய்கண்டாருக்குத் தொடர்புடையதில்லை என்றால் அவற்றைச் சித்தாந்த சாத்திரங்கள் என்று சொல்வது பொருத்தமாக இருக்கலாம். ஆனால் மெய்கண்ட சாத்திரங்கள் என்று சொல்வது எவ்வாறு பொருந்தும் என்பது இரண்டாவது ஐயம். இந்த ஐயங்

களைத் தடைவிடைகளோடு பின்னுல் விளக்க முயல்வோம். இப்போது வரலாற்று முறையில் இந்த இரண்டு நூல்களையும் குறித்த செய்திகளை முறைப்படுத்திக் கூறுவோம்.

பெயரளவில் இந்த இரு நூல்களுக்கும் ஒரு பெருஞ்சிறப்பு - முதலில் 'திரு' என்ற அடையும், இறுதியில் 'ஆர்' என்ற விகுதியும் அமைந்திருப்பது தமிழ் நூல்களின் வரலாற்றில் மிகவும் அருமை யானது. இத்தகைய அருமைப்பாடு மாணிக்கவாசகர் செய்ததாக வழங்குகின்ற திருக்கோவையாருக்கும், அவரே செய்த திருவாசகத்தின் பகுதியாகிய திருவுந்தியாருக்கும் மட்டுமே உண்டு. வேறு எந்த நூலுக்கும் இந்த அடையும் விகுதியும் இல்லை. நாலடியார் சிறப்பினுல் 'ஆர்' என்ற விகுதி மட்டுமே பெற்றிருக்கிறது.

இந்த இரு நூல்களைச் செய்த ஆசிரியர்கள் இருவரும் உய்ய வந்தார் என்றே பெயர் பெறுகின்ருர்கள். திருமுறைத் தொகுப்பும் பாதபாடும் பெரிபபுராணத்தோடு முற்றுப் பெற்றிருந்தன. உந்தி, களிறு என்ற இரண்டு நூல்களும் பெரியபுராணத்தின் பின் எழுந்தன, மெய்கண்டாரிலிருந்து தோன்றிய சித்தாந்தசாத்திர நூல்களை ஆன்ருேர் தொகுக்க எண்ணியபோது அவற்றைத் திருமுறைகளோடு சேர்க்க இயலவில்லை. காரணம் திருமுறைகள் முழுமையும் தோத்திர அருள் நூல்கள். (இவற்றுள் திருமந்திரம் ஒன்று மட்டும் தோத்திரமும் சாத்திரமுமாய் அமைந்தது). பன்னிரண்டு என்று திருமுறைகளை முடித்தபிறகு அவற்றை மேலும் பெருக்க ஆன்ருேர் எண்ணவில்லை. அன்றியும் உந்தி, களிறு என்ற இரண்டையும் சாத்திரங்கள் என்று கருதியமையால் இவற்றைத் திருமுறைத் தொகுப்புக்களோடு சேர்த்து எண்ணுவதும் பொருத்தமாக இல்லை. மேலும் இவ்விரண்டும் பெரிய புராணத்தை அடுத்துப் பின் வந்தவை என்பது வழக்கு. ஆகவே சிவஞானபோதம் முதலாக சாத்திரங்களைத் தொகுத்தபோது இந்த இரு நூல்களையும் அவற்ருேடு ஆன்ருேர் சேர்த்துக் கொண்டிருக் கிருர்கள். மெய்கண்ட நூல்கள் பன்னிரண்டோடு இந்த இரண்டையும் சேர்த்துப் பதினன்காக ஆக்கியிருக்கிருர்கள்.

மெய்கண்ட சாத்திரங்கள் குருசிஷ்ய உபதேசக் கிரமமாக, சைவ சித்தாந்த உண்மைகள் முழுமையும் அல்லது அவற்றுள் ஏதேனும் ஒருபகுதியை மட்டும் முறையாக எடுத்து விளக்குவன ஆகும். ஆனுல் உந்திகளிறு இரண்டும் இந்த முறையில் சைவசித்தாந்தப் பொருளைக் கூறும் சாத்திர நூல்கள் ஆகா. இவை அனுபூதி நூல்கள். சிவானு

பவம் பெற்ற இப்பேராசிரியன்மார்கள் அனுபூதி வாக்காக இவற்றை எழுதி வைத்தார்கள். இவற்றில் சாத்திரமும் உண்டு; அதனால் சாத்திரங்களோடு இவற்றைத் தொகுப்பது பொருத்தமே. ஆயினும் இவற்றில் தோத்திரமும் உலகியலும் கூட காணப்படும்.

மற்றொரு நூலைக் குறிப்பிட்டு அப்பாற்செல்வோம். ஞானமிர்தம் என்பது ஒரு சிறந்த சாத்திர நூல் வாகீச முனிவர் என்னும்அனுபூதிமான் 75 அகவற்பாக்களால் சைவசித்தாந்த உண்மைப் பொருளை இதனுள் விளக்கியுரைக்கிறார். ஆயினும் இதற்குப் பண்டைய உரை எழுந்திருந்த போதிலும் கூட ஆன்றோர் இந்த நூலைச் சித்தாந்த சாத்திர நூல்கள் வரிசையில் சேர்க்கவில்லை. இந்த நூலின் போக்கு சம்பிரதாய சைவசித்தாந்தப் போக்கல்ல. இதன்போக்கும் சொற்களும் தொடர்களும் வேறு வகையாக இருப்பதால் ஆன்றோர் இதைச் சாத்திர வரிசையில் சேர்த்து எண்ணவில்லை என்று நாம் கருதலாம்.

உய்யவந்தார் இருவர் என்று குறிப்பிட்டோம். திருவுந்தியார் பாடியவர் திருவியலூர் உய்யவந்த தேவர் என்பவர். (ஏடுகளில் இப் பெயர் உய்யக்கொண்டநாயனார் என்றும் காணப்படுகிறது.) இத் திருவியலூர் தேவாரப் பாடல் பெற்ற தலமாகும். இவருடைய மாணுக்கர் ஆளுடைய தேவநாயனார் என்பவர். இவரிடத்திலே திருவுந்தியார் பாடம் கேட்டு அதைத் தமது மாணுக்கரான திருக் கடவூர் உய்யவந்த தேவர் என்பவர்க்கு உபதேசம் பண்ணினார்: இவர்மூல நூலுக்கு வியாக்கியானம் போலப் பல உதாரணங்களைத் தந்து விரிவான ஒரு நூல் செய்தார். அதுவே திருக்களிற்றுப்படியார். உந்திகளிறு இரண்டையும் செய்தவர்கள் இருவரும் ஒரே பெயருடையவர்கள்.

திருவுந்தியார்:—

திருவுந்தியார் என்பது இரண்டு அடிமேல் மூன்றுவது அடி அடுக்கி வந்த தாழிசையாக 45 பாடல்கள் உடையது. ஒவ்வொரு பாடலும் மூன்றடி. முதல் இரண்டு அடிகளும் எதுகையிலும் இரண்டாமடி, மூன்றும் அடிகள் முதலெழுத்துமோனையிலும் அமைந்துள்ளன. இரண்டு, மூன்று அடிகளின் இறுதியில் 'உந்தீபற' எனும் தொடர் அமைந்துள்ளது, இதுமுழுமையும் திருவாசகத்தைத் தழுவி அமைக்கப்பட்ட யாப்பு ஆசிரியர் 44 பாடல்களில் தமது சிவானுபவத்தை உரைத்தபின், 45ஆம் பாடலைத் தற்சிறப்புப் பாயிர மாக அமைத்திருக்கிறார்.

வைய முழுவதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை உந்திபற
உண்மை யுணர்ந்தாரென் றுந்திபற.

இதனுள் உய்யவந்தான் என்று ஆசிரியர் தம்மைக் குறிப்பிடுவது அறியத்தக்கது.

திருவுந்தியார் போன்ற அமைப்புடைய நூல்கள் தமிழில் சில உள. திருவாசகத் திருவுந்தியார் முன்னமே சொல்லப்பட்டது. அது பத்தொன்பது பாட்டுகளும் அதற்கு மேலாக ஒரு மிகைப்பாடலும் உடையது. பின்னர், தத்துவராயர் தமது பாடுதுறையுள் 101- வது பிரபந்தமாகத்திருவுந்தியார் என்று பத்துப்பாடல்கள் பாடியிருக்கிறார். [காலம்15- ஆம் நூற்றாண்டு] 17- ஆம் நூற்றாண்டில் வீரசைவ சாந்தலிங்க சுவாமிகள் (திருப்பேரூர்) அவிரோத உந்தியார் என்ற பெயரில் உந்தி அமைப்பினாலே நூறு பாடல்கள் பாடியிருக்கிறார்: பிற்காலத்தில் சோமசுந்தர நாயனார் சித்தாந்த உந்தியார் என்ற பெயரில்100பாடல்கள் பாடியுள்ளார். 1933-ல்திருவண்ணாமலை இரமண மகரிஷிகளது இரமண சந்நிதி முறை பாடிய முகவைக் கண்ண முருகனார் இரமண மகரிஷி மீது 2 திருவுந்தியார்ப் பிரபந்தங்கள் 137, 7 பாடல்களால் பாடியிருக்கிறார். இவையே, இதுகாறும் வெளி வந்துள்ள உந்திப் பிரபந்தங்கள். அனைத்தும் தோத்திரப் பிரபந்தங் களாயிருக்க உய்யவந்த தேவர் நூலும் சாந்தலிங்க சுவாமி நூலும் சாத்திர நூல்கள்.

உந்தியென்பது குழாம் கூடிய மகளிரது விளையாட்டென்பர், உந்தி என்று ஒரு தும்பியை விளித்து இவ்வாறு நீபற என்று சொல்லி மகளிர் அவ்வாறு பறப்பது போலத் தாமும் ஆடி விளையாடுவது உந்திப் பாட்டு. இவற்றின் விளக்கத்தைப் பின்னர் பார்க்கலாம்.

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

**காமாலை, சோகை நீங்க**

1] வில்வ இலையின் சாற்றை எடுத்து அத்துடன் மிளகுத்தூள் சேர்த்துக் கொடுக்கச் சோகை, காமாலை நீங்கும்.

**பூச்சிகள் நீங்க**

2] மாசிப்பச்சை இலையின் சாற்றை உள்ளுக்குக் கொடுக்க, பூச்சிகள் விழும்.

**தோல் வியாதிகள் நீங்க**

3] பிரமதண்டின் இலையின் சார்எடுத்து ஒருதோலா விதம் 40 நாட்கள் வெறும் வயிற்றில் சாப்பிடத் தோல் வியாதிகள் குணமாகும்.

Dr. N. சடையப்பன், S.M.P

# மாணிக்கத் தீங்கனி

புலவர்
முருகு. சுவாமிநாதன் எம். ஏ.,

கனியினைப் பெற்று நாம் சுவைத்து மகிழ்கையில் அக்கனி நமக்கு கிடைத்த வழியினை, அது உருவாகி முதிர்ந்த படி நிலையினைச் (Steps) சற்று உளங் கொள்வதுதகும்; மண்ணில் விதை விழுந்து தண்ணீர், சூரிய ஒளி ஆகிய காரணிகளால் செடி முளைத்து உருவாகிஅரும்பிபூத்துக் காய்த்துப் பின் முதிர்ந்து கனியாகின்றது.

இவ்வாறு படிநிலைகளில் அமைந்து வளர்ந்து முதிர்கின்ற கனி நமக்குச் சுவை தந்து இன்ப மூட்டுகின்றது. அக்கனிகள், உண்பாரின் மனப்பாங்குக்கும், உண்ணும் இடம், காலம், சூழ்நிலைக்கும் ஏற்ப விதவிதமான சுவைகளைத் தருகின்றன; ஒருவருக்குப் பிடிக்கின்ற கனி மற்றொருவர்க்கு ஓரளவு பிடித்தும், மற்றொருவர்க்குமுழுமையும்பிடிக்காமலும் இருப்பதைஉலகியலில்காணலாம்

ஆனால் உலகில் உள்ள எல்லோர்க்கும் எக்காலத்தும் எவ்விடத்தும் இனிமை தந்து இன்ப மிகுக்கும் கனி ஒன்று உண்டு! அதுதான் 'இறைவன்' எனும் அருங்கனி; அக்கனி புளிப்பதில்லை; அழுகி வீணாகப் போவதில்லை; நின்று நிலைத்த சுவையினைத் தருவதாக அது அமைந்துள்ளது.

'அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே'
''நிழல் கனிந்த கனியே''
'பண்ணிடைத் தமிழொப்பாய்'
பழத்தினிற் சுவையொப்பாய்'
சிந்தித்தெழு வார்க்குநெல் லிக்கனியே',
''கல்நார் உரித்த கனியே போற்றி''
''தேனைப் பழச்சுவை ஆயினானை''

எனும் தொடர்கள் இறைவனை இன்ப மிகுக்கும் கனியாகக் கண்டு பரவியனவாம்.

உலகியலில் நாம் உண்ணுகின்ற கனிகளின்வளர்ச்சிக்குரிய படிநிலைகளையும், அவை உண்டாக வேண்டிய காரணிகளையும் கண்டோம். அதே போல இறைவன் என்னும் ஆரா இன்ப அருங்கனியை எய்தவும் சில முறைகளும், மூலப் பொருள்களும் தேவை.

கனி, நமக்குச் செடி, மரம் முதலானவற்றிலிருந்து கிடைக்கின்றது, அவை - செடி, கொடி மரங்கள் - வளர முதலாவதாக மண்வளம் மிக்க நிலம் வேண்டும்; அருங்கனி பெற இதயமாகிய நிலத்தையே தேர்ந்தெடுக்க வேண்டும்;

'நெஞ்சப் புனத்து'

நிலமானது பண்பட்டதாக இருக்க வேண்டும்; அதில் ஏதேனும் தேவையில்லாத, பயிருக்கு இடர்விளைக்கக் கூடிய பொருள்கள் இருப்பின் நீக்குதல் போல, தூய மனமாகிய நிலத்தில் வஞ்சனை இருப்பின் அதனை நீக்க வேண்டும்; நீக்கும் போது, வேரோடும் அகழ்ந்து அதன் சிறு பகுதி கூடத்தங்கி விடாமல் ஒழித்து விடவேண்டும்.

'......வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கி'

ஒரு இடத்தில் தோண்டினுல் பள்ளம் ஏற்படும்; பயிர் செய்கின்ற நிலத்தில் மேடுபள்ளங்கள் இருக்கக் கூடாதே; சமமாக வேண்டும்! என்ன செய்வது, அப்பள்ளங்களைத் தூர்த்து நிரப்ப வேண்டும்; குழிகளை மூட வேண்டும்.

'.................தூர்வை செய்து'

பள்ளங்களை மூடி சமப்படுத்திய பின்னர் தனித்தனியாக வரப்பினுல் அடைத்துப் பாத்தி தயாரிக்க வேண்டும்; பாத்தியினைக் சோலுகையில் எதனைக் கொண்டு வரையறைப் படுத்துவது; அன்பைக் கொண்டே;

'அன்பென் பாத்தி கோலி'

பயிர் வளர்ந்தபின் எருவிடுவதும் உண்டு; அவ்வாறன்றிப் பழைய கால பயிர்ச்சாகுபடியில் எருவிடுதல் முதலில் இடம்பெறும் பசுந்தாள், சாணி எருக்களை முன்னிட வேண்டும்; உண்மையெனும் எருவை முன்னதாகவே எல்லா இடத்திலும் செறிவாகப் பரவும்படி தெளித்தல் நல்லது;

''.........................முன்புற
மெய்யெனும் எருவை விரித்
தாங்கு''

எரு விட்டு வளப்படுத்தியபின் வித்திட வேண்டும்; வித்து நன்கு முதிர்ந்த, பக்குவப் படுத்தப்பட்டதாக ஆரோக்கிய மிகுந்ததாக இருப்பின் அது செடியின் வளர்ச்சிக்குஏதுவாக அமையும்; தனித்தன்மை பெற்றதாகவும் வித்து இருக்கவேண்டும்;வித்தாக எதனை இடுவது;பத்தியாகிய-அன்புமுதிர்வாகியவிதையே சிறந்தது ஆகும்.

''.........................ஐயமில்
பத்தித் தனிவித் திட்டு''

நீரின்றி உலகு அமையாது; பசும்புல்லின் தலையைக் கூட விசும்பின் துளிவீழாக்கால் காண முடியாது;எனவே பயிர் வளர நீர்ப் பாய்ச்சுதல்அவசியம்;இக்காலத்து அணையில் தேக்கி 'முறை' (turn) வைத்து நீர் விடுதல் போல அல்லது ஆர்வமாகிய தெளிந்த நீரை தினமும் பாய்ச்சுதல் வேண்டும்.

——————————— நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி.

பயிர் விளைகையில் அதற்கு விலங்குகளாலும், பிராணிகளாலும், மனிதர்களாலும் இடையூறு ஏற்படும்; அவை வயலுள் புகுந்து பயிரைத் தின்னுதலும், அழித்தலும், கவர்ந்து செல்லுதலும் உண்டு. எனவே பயிரைப் பாதுகாக்கச்சுற்றிலும் வேலி தேவைப்படுகின்றது. அவ்வாறு இடையூறு செய்கின்ற பகைகளிலிருந்து காக்க சாந்தமாகிய சிறந்த வேலியைக் கோல வேண்டும்.

''———————— நேர்நின்று
தடுக்கு நர்க்கடங்காது இடுக்கண் செய்யும்
பட்டி அஞ்சினுக் கஞ்சியுட் சென்று
சாந்த வேலி கோலி''

வித்திட்டு, நீர்பாய்ச்சி, வேலி அமைத்தபின் பயிர்முளை விடத் தொடங்கும், அது சீராக, அழிவின்றிஅளவாக வளருகின்றதைப் பார்க்கலாம்: ஞானமே பெரிய முளையாகித் தோன்றும்.

'———————— வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்து'

முளைக்கும் பயிர் துளிர் விடுவது இன்பத்தை மிகுவிப்பதாகும்; பசுந்தளிர் செழிப்புறக் காட்சியளிப்பது மனத்துக்கு அளவில்லாத உவகை தரும்; இங்கே, கருணையே இளந்தளிராக உருவெடுக்கின்றது.

'கருணை இளந்தளிர் காட்ட'

நன்மையிருப்பின் தீமையுண்டு; இன்பத்தோடு துன்பம் இயற்கை, பயன் அளிக்கும் பயிர் ஒருபுறம்: அதையடுத்துப் பயனில்லாத களைகள் தோன்றும்; பயனில்லாதோடு அவை பயிர்க்குக் கேடு விளைவிக்கவும் செய்யும்: பயிருக்கு நாம் அளிக்கின்ற சத்துப்பொருள் களைத் தான் உறிஞ்சி வளரும்; எனவே அவற்றைக்களைய வேண்டும்; உயிர்கள் தம்மிடமுள்ள காமம், குரோதம், ஆகிய களை களைக் களைந்தெறியின் பக்திப் பயிர்க்கு ஆரோக்கியம் மிகும்; இடையூறு இருக்காது.

'———————— அருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து'

களையெடுத்த பின் பயிருக்கு ஒரு குறையும் இல்லையே; உரிய சத்துப் பொருள்களை உறிஞ்சி ஓங்கி வளர்கின்றது. அவ்வாறு ஓங்குவதிலும்ஒருமுறைமையோடு உயர்கின்றது.

''சேமப் படுத்துழிச் செம்மையின் ஓங்கி

ஓங்கி வளர்ந்த பயிர் தன்னை உண்டாக்கியவனுக்குப் பலனைத் தரவேண்டுமே; அது உடனே முடியுமா? எனவே முதற்கட்டமாகச் செடியில் 'முகிழ்' தோன்றும்: அது வெளிப்படுவது போல உடலின்கண் பக்தி மேலீட்டினால்

உள்ளங் குளிர உரோமஞ் சிலிர்த்து உரையும் தள்ளும்; தன்னை மறக்கின்ற நிலை வரும்.

''மெய்ம்மயிர்ப் புளகம் முகிழ்த் திட்டு''

முகிழானது அரும்பாகிய அடுத்த பருவத்தை எய்தும்; கண்ணீரே அரும்பாக வெளிப்படும்.

''கண்ணீர் அரும்பி''

அரும்பிப் போதாகி மலர்கின்ற நிலையை எய்தும்; மலர் மணமில்லை யேல் சிறப்பில்லை; ''இணரூழ்த்தும் நாறாமலர்'' என்பது சான்றோர் வாக்கன்றோ; அம்மலர் மிக்க மண முடையதாக மலர்கின்றது;

'கடிமலர் மலர்ந்து'

மலர் தன்னகத்தே காயை உண்டாக்கும்; பூக்காதேகாய்க்கும் மரமுமுள; இருப்பினும் பூத்துக் காய்ப்பனவே பெரும்பான்மை. புண்ணியம்மிக்க அஞ்செழுத்தே பெறுதற்கரிய காயாகத் தோன்று கின்றது.

''——————— புண்ணிய அஞ்செழுத்தருங்காய்தோன்றி''

காய் முற்றியபின் பழமாகும்; முதிர்ந்த நிலையில் எதையும் பழம் என்பது மரப; வயது முதிர்ந்த நிலையில் உள்ளோரைப் பழுத்த பழம் என்பதும், பக்தியில் முதிர்ந்து சிவனடியை என்றும் மறவாத சிந்தையரைச் 'சிவப் பழம்' என்றலும் உலகியலில் உண்டே; அந்த போல காய் முற்றிக் கனிந்த நிலையை அடைந் ததும் அதனைப்பழம் என்றும் கனி என்றும் தொழில் பற்றிக் கூறுவது காணலாம்; கனியானது நஞ்சுபொருந்துதலால் கருமை யான கழுத்துப் பகுதியைக் கொண்டுள்ளது; அதில் கண்கள் மூன்று காணப்படுகின்றது. அதற்குத் தோளும் உண்டு எத்தனை தெரியுமா? நான்கே தோள்; தோள் இருக்கையில் முகம் இருக்காமல் போகாதே: முகமும் உண்டுதான். அது ஒளி பொருந்தியது. ஒன்றல்ல ஓரைந் தாகும். பழத்தின் நிறம் என்ன? கருப்பா? மஞ்சளா? இல்லை இல்லை. இக்கனியின் நிறம் பவளம்; பவள மாயின் சிவப்பாயிற்றே கனி சிவந்த நிறமுடையது போலும்? கனியின் நிறம் முழுமையானதா, இல்லை இடைஇடையே ஏதேனும் கோடுகள் உண்டோ? ஆமாம் வெண்மையான பொடி பூசியது போன்ற கோடுகள் உண்டு;

'——————— நஞ்சுபொதி
காள கண்டமும் கண்ணொரு மூன்றும்
தோளொருநான்குஞ்சுடர்முகம் ஐந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி

இத்தனை அழகு மிக்க கனி சுவை மிக்கதோ? ஆமாம் எப்படிப்பட்ட சுவையுடையது;

சிலபொருள்களைக் கண்டால் மகிழ்ச்சி மிகும்; சிலவற்றைக் காதால் கேட்டால் இன்பம் வரும்; கருதினுல் உவகை தருவது சில; ஆனுல் இக்கனியோ கண்ணுரக் கண்டாலும், காதாரக் கேட்டாலும் உளமாரச் சிந்தித்தாலும் மகிழ்ச்சி தரும்.

சர்க்கரை யுண்டால் இனிப்புத் தரும்; மிளகாய் காரம் தரும்; இவ்வாருன அறுசுவைகளில் இக்கனி எந்தச்சுவையினைத் தரும்? அது இவ் ஆறு சுவைகளையும் விட மிகுந்த சுவையுடையது.

'அறுசுவை யதனினும் உறு
சுவை உடைத்தாய்'

அழகுற வளர்ந்து காய்த்துப் பழுத்துள்ளதே; அதற்குப் பெயர் தான் என்ன? பெயரில்லாத கனியும் உண்டா? ஏதேனும் ஓர் பெயரிருக்குமே? அக்கனி எங்குள்ளது? என்னும் வினுக்கள் எழும்; அதற்கு விடை கூற நமக்குத் தெரியவில்லை; ஆனுல் விடை கூறுகின்ருர் பட்டினத்தடிகள். அக்கனியின் பெயர் மாணிக்கத் தீங்கனி அது திருவிடைமருதூரில் உள்ளது என்கின்ருர்.

சேனுயர் மருத மாணிக்கத்
தீங்கனி

****

# ஆலய பூஜைப் படிக்காசு நிதி
## அளித்த அன்பர்களின் பட்டியல்

| | | |
|---|---|---|
| | 4—7—82 வரை கூடுதல் | 14335-10 |
| திரு | எஸ் ஆர் வெங்கட்ராம் சென்னை | 5-00 |
| திரு | துர்க்கா குடில் அப்பு குடந்தை | 5-00 |
| திரு | தா. ம. வெள்ளைவாரணம் திருப்பனந்தாள் | 10-00 |
| | 5—8—82 வரை கூடுதல் | 14355-10 |

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

 கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

## அவத்தை இலக்கணம்

### கேவலாவத்தை

33. ஓங்கிவரும் பலவுயிர்கள் மூன்றவத்தை பற்றி
உற்றிடும், கேவலசகல சுத்தமென உணர்வர்,
ஈங்குவரும் கலாதியொடு குறியுருவம் ஒன்றும்
இன்றிமலம் அன்றிஒன்றும் இல்லைஎனும் இயல்பாய்
ஆங்கறிவை அறிவரிதாய் அறிகருவி அணையா
ஆதலினல் இருள்மருவும் அலர்விழிபோல் அதுவாய்
நீங்கும்வகை இன்றிநித்த வியாபகமாய் அங்கண்
நிற்பது கேவலமென்று நிகழ்த்தும் நூலே.

(தெ-ரை) படிப்படியாகத் தகுதியால் உயர்ந்து வரும் எண்ணிறந்த உயிர்கள் மூன்று அவத்தைகளைப் பற்றி நிற்கும். அவற்றைத் தனிநிலை (கேவலாவத்தை), கூட்டுநிலை (சகலாவத்தை), தூயநிலை (சுத்தாவத்தை) என அறிஞர் கூறுவர். அவற்றுள் தனிநிலையாவது கூட்டுநிலையில் நிகழும் கலை முதலிய தத்துவங்களும் பருவுடம்பு நுண்ணுடம்பு முதலிய உடம்புகளுமின்றி, ஆணவத்தோடு பிணிப்புற்றுக் கிடக்கும் நிலையல்லது வேறொரு நிலை இல்லை என்னும் தன்மையதாய், அறிதற்குரிய கருவிகளும் கூடா ஆதலின் அவ்விடத்தே ஒருபொருளையும் அறிய இயலாததாய், இருளைப்பொருந்திய விழித்த கண் போன்று அவ்வாணவத்தில் அழுந்தி, அதனை விட்டு நீங்குதற்குரிய நிலையின்றி, பிறப்பும் இறப்பும் ஒருவழி உணர்வும் உடையவன்றி ஆணவத்தோடு மட்டும் கூடிநிற்பதாம் எனத்தெளிந்த நூல்கள் கூறும்.

உயிர்கள் திருவருள் துணையால் படிப்படியாக உயர்ந்து வரும் இயல்பினவாதல் பற்றி 'ஓங்கிவரும் பலவுயிர்கள்' என்றார். கலாதி-கலை முதலிய தத்துவங்கள். குறிஉருவம் - குறிக்கப்படும் உடல்:

பரவுடல், பருவுடல். நுண்ணுடல் என்பன. கண் விழித்திருப்பினும் இருள் இருப்பின் ஒன்றையும் காண்டற்கு இயலாது. அதுபோல உயிர் அறிவுடையதாயினும் ஆணவத்தோடு கட்டுண்ட இத்தனி நிலையில் கருவி கரணங்கள் முதலிய யாவும் இன்மையின் அறியாமை உடையதாய் விளங்கும்.

### மலம் இரண்டே என்பார் கருத்து

34. இன்மைமலம் மாயைகன்மம் என்றிரண்டே இறைதான்
இலங்கு பல உயிர்களும்முன் புரிந்த இருவினையின்
தன்மைகளால் எவர்களுக்கும் தனுகரண புவனம்
தந்திடும்இங்கு இதனாலே இருபயனும் சார்ந்து
கன்மமெலாம் நேராக நேராதல் மருவக்
கடவுள் அருளால் எவையும் கழித்திடுவன் அதனால்
பின்மலமா னவைஅணுகா பெருகொளிமுன் புளதே
பெற்றிடும்என்று இத்திறம்என் பேசு மாறே.

(தெ-ரை) ஆணவமலம் என்பது ஒன்று இன்று; மாயை கன்மம் என இரு மலங்களே உள்ளன. இறைவனும் விளங்கி நிற்கும் பல உயிர்களுக்கும் முன் செய்த இருவினைக்கு ஈடாக உடல் கருவி உலகு நுகர்வு ஆகியவற்றைத் தந்திடுவன். இவ்வாறு இறைவன் வழங்குதலால் இன்பங்களை நுகர்ந்து எல்லாக் கன்மங்களும் நேரொத்து வரும்பொழுது இறைவனும் குருமூர்த்தியாய் எழுந்தருளி வந்து திருவருள்புரிந்து அக்கன்மங்கள் எல்லாவற்றையும் நீக்கியருளுவன். பின்னர் தம் திருக்கண் நோக்கு உள்ளிட்ட அருள்செயல்களால் அம்மாயை கன்மங்களும் வந்து பொருந்தா. பொருந்தாதாகவே உயிர்களும் முன்பு உளதாகிய பேரறிவைப் பெற்றிடும் என்று இவ்வாறு ஐக்கியவாதசைவர் கூறுவர். அத்திறம் என்ன?

மலம்இன்மை என மாறுக. ஆணவமலம் என்பதொன்று இல்லை. மாயை கன்மங்களாகிய இரு மலங்களே உளவாவன. உயிர் தன்முன்னை வினைக்கு ஈடாய் உள்ள உடல் கருவி உலகு ஆகியவற்றைப் பெற்று அவற்றின்வழி இன்ப துன்பங்களை அடையும். இருவினையொப்பும் மலபரிபாகமும் உயிர்க்கு நேர இறைவன் குருமூர்த்தியாய் வந்து தன் திருக்கண் நோக்கம் முதலானவற்றால் உயிர்களை ஈடேற்றுவன் என்பது ஐக்கியவாத சைவரின் கொள்கையாகும். அத்திறம் என்ன என்று வினவுமுகமாக அது பொருளன்று என்பதை ஆசிரியர் புலப்படுத்துகின்றார். இதனை அடுத்து வரும் பாடலில் விளக்குவர்.

35. மாயைமுதல் எனவினையின் பான்மைமுதல் எனவே
மன்னுபனை விதைமரபின் மயங்கும்மலம் சுத்தற்கு
ஏயுநெறி என்கொல்அதன் இயல்பாயின் முத்தி
என்பதுஎன் மற்றிவை நிற்க இநங்கலாதி உணர்வாய்
மேயபினர்த் தன்னுருவம் விளங்காமை விளக்கும்
மிகும்உலகம் தனில்என்னில் இவைவிடுங்கால் உணர்வுள்
தோயுநெறி இலதாதல் அறியாமை எனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே:

(தெ-ரை) மாயை முந்தியது என்றும், வினைப்பகுதி முந்திய தென்றும் கூறுமிடத்து நிலைபெற்றிருக்கும் பனை முந்தியதோ அன்றி அதன் விதை முந்தியதோ என்ற வினக்களை யொத்து அதற்கு விடை காண முடியாதவாறு மயங்க நேரும். அன்றியும் ஆணவ மற்ற தூய உயிரை, அம்மாயை கன்மங்கள் எதற்காகப் பொருந்தும் என்ற வினு எழும். அவை உயிரிடத்துப் பொருந்துதல் இயற்கை எனில், உயிர் வீடு பேறடைந்த பின்னும் அவை பொருந்தும் என்றல் வேண்டும். இவை நிற்க. பெரிய கலை முதலிய தத்துவங்கள் உயிரைப் பொருந்தி அதற்கு உணர்வு தருங்கால், உயிரது அறிவு விளங்காதவாறு மறைத்து பெரிய இவ்வுலகியல் உணர்வையே காட்டிநிற்கும் என்று சொல்லின், நன்று. இக் கலை முதலிய தத்துவங்கள் நீங்கிய பேருறக்கத்தில் உயிரது அறிவு விளங்கா மைக்குக் காரணம் என்ன என்ற வினு எழும். அதற்குக் காரணம் அறியாமை என்னில் அதனையே ஆராய்ந்து துணிந்தவர்கள் ஆணவ மலம் என்பர்.

முதல் என - முந்தியதோ என்றும். பனை முந்தியதோ அதன் விதை முந்தியதோ என்ற வினவை எழுப்பி வாதம் செய்யும் முறையைத் தருக்க நூலார் தாலபீச நியாயம் என்பர். தாலம் - பனை. பீசம் - விதை. உயிர் அநாதியே தூய்மை உடையது. அதனை மாயை கன்மங்கள் இடையில் வந்து பொருந்தும் என்பது ஐக்கிய வாதிகளின் கொள்கையாகும். அவ்வாறு உயிர் தூய்மை உடைய தாயின் இம் மாயை, கன்மங்கள் இடையில் வந்து பொருந்தக் காரணம் என்னை எனச் சைவசித்தாந்திகள் மறுத்து உயிர் அநாதியே ஆணவ மலத்தோடு பிணிப்புண்டு கிடப்பதெனக் கூறி மறுப்பர். சுத்தர்க்கு - அநாதியே மலம் நீங்கிய உயிர்க்கு. (இது ஐக்கிய வாதியர் கருத்தைக் கொண்டு கூறியதாம்). அறிவில்லாமையே

ஆணவம் என்பாரும், ஒன்றைப் பிறிதொன்ருகக் கருதும் மயக்க உணர்வே ஆணவம் என்பாரும், தாமத குணமே ஆணவம் என்பாரும், அவிச்சை அகங்காரம் முதலிய ஐவகைக் குற்றங்களுள் அவிச்சையே ஆணவம் என்பாரும், மாயை கன்மங்களே ஆணவம் என்பாரும், சிவசத்தியே ஆணவம் என்பாருமாகப் பலரும் பலவாருகக் கூறுவர். அவை அனைத்தையும் கருத்துட் கொண்டே ஆசிரியர் 'இவை நிற்க' என்றனர். உயிரது அறிவை விளக்குதற்காக அதற்கு முப்பத்தொரு கருவிகள் கூட்டப்படுகின்றன. கலை, நியதி முதலாய அறிவு விளக்கம் தருவன [வித்தியா தத்துவம்] ஏழும், அறி கருவிகள் ஐந்தும், தொழிற் கருவிகள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும் தன்மாத்திரைகள் ஐந்தும், அகக் கருவிகள் நான்குமென ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் ஆக முப்பத்தொரு தத்துவங்கள் கூட்டப்படுகின்றன. அவற்றுள் கலை முதலிய ஏழு தத்துவங்களும் சிறப்புடையன. ஆதலின் 'இரும் கலாதி' என்ருர். இம் முப்பத்தொரு தத்துவங்களும் பெரிதும் உலகியல் உணர்வில் ஈடுபடச் செய்வன ஆதலின் இவற்றினுலேயே உயிர் தன்னறிவு விளங்காது என்பது ஐக்கிய வாதிகள் கருத்து. உயிர் தன் அறிவு விளங்காமைக்கு இவையே காரணம் எனில் இவற்றினின்றும் நீங்கிய நல் உறக்கத்தில் உயிர் தன் உணர்வு பெற்றிருத்தல் வேண்டும். ஆண்டும் இல்லை ஆதலின் இடையில் வந்து கூடிய இத் தத்துவங்களே காரணம் என்பது சாலாது. இவற்றின் வேருக உள்ள ஆணவ மலமே அதற்குக் காரணம் என விளக்கம் தந்தனர் ஆசிரியர். உள் உணர்வு - உயிர் அறிவு. எனவே ஆணவமலம் ஒன்று உண்டென்பதும் உயிரிடத்து அநாதியே அது பொருந்தியுள்ளது என்பதும் அறியத் தக்கதாம்;

மாயை கன்மங்களுக்கு வேருக ஆணவம் உண்டு எனல்

36: அந்நியமா னவைஉணர்த்தி அநனியமாய் நிறைந்த
அறிவுஅறியா மையினுனும், அருள்நிலவும் காலம்
தன்னில்அவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானும், உயிர் தானெனஒன்று இலதாய்
மன்னியிடும்; மலமாயை கன்மங்கள் மாறி
வந்திடும்; இங்கு இதுவழுவாது ஆதலினுல் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழிய உளதென்று
உணர்வரிதாம் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே.

(தெ-ரை) ஆணவ மலம், உயிர்கட்கு வேருய நிலையற்ற இவ் உலகை நிலையுடையதென அறிவித்து நின்று, உயிரிடத்து வேறன்றி நிற்கும் அறிவாகிய சிவபரம்பொருளை அறியாமையினுலும்; உயிர் திருவருள் விளக்கம் பெற்ற தூயநிலையில் சிவபரம்பொருளே

எல்லாமாய் நின்ற பழமையைத் தாம் அறிதலானும்; உயிர் என்பதொரு பொருள் இலைனுமாறு அவ்வுயிரேயாய் இவ்வாணவம் நிலைபெற்று நிற்கும். மாயையும் கன்மமும் உயிர் உலகு கருவி முதலிய வற்றேடு கட்டுண்ட (சகல) நிலையில் பற்றுவதும், கட்டற்ற [கேவல] நிலையில் விடுவதுமாய் மாறி நிற்கும். ஆனல் இவ்வாணவமோ கட்டுண்ட நிலையிலும் கட்டற்ற நிலையிலும் மாறின்றிப் பொருந்தி நிற்கும். ஆதலின் மனத்தால் நினைத்தற்கரிய திருவருள்துணையினு லன்றி ஆணவமலம் உளதென அறிய இயலாது. அத்தகைய திருவருள் உண்மை இல்லாமையின் உனக்கு அதன் தன்மை உணர் தற்கரிதாம்.

அந்நியம் - வேருக நிற்பது: இவ்வுலகு உயிரின் வேருயதாம்; உயிர் யாரானும் படைக்கப்பட்டதன்று. இவ்வுலகோ இறைவனல் படைக்கப்பட்டதாம். உயிர் நிலைபேறு உடையது. இவ்வுலகு அழிதற் குரியது. உயிர் அறிவுடையது. இவ்வுலகு அறிவற்றது. இவ்வாறு வேருயதும் அழிதல் மாலையது மாய பொருளல்லாத உலகைப் பொருள் என்று கருதுதற்கு ஆணவமே காரணமாகும். திருவள்ளு வனர் இதனை மருள் என்பர். 'பொருளல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளானும் மாணுப் பிறப்பு' என்பது திருக்குறள். அநந்நியம் - வேறன்றி நிற்பது. நிறைந்த அறிவு - திருவருள் : குறைவிலா அறிவு ஆதலின் 'நிறைந்த அறிவு' என்ருர். அருள் நிலவு காலந்தன்னில் - இருவினை ஒப்பும் மலபரிபாகமும் பெற்று இறைவனது அருள் விளக்கம் பதிந்த காலத்தில். ஆணவத்திற்கும் மாயை கன்மங்களுக்கும் பல்வேறு வகையில் வேற்றுமை உண்டு: ஆணவம் உயிரை இடனுகக்கொண்டு விளங்கும். மாயை கன்மங்கள் இறைவனது உடைமைப்பொருளாக நின்று விளங்கும். ஆணவம் அறியாமையைச் செய்யும். மாயை கன்மங்கள் உயிர் செய்த வினைக் கேற்ப இன்ப துன்பங்களை நுகர்தற்கு ஏதுவாய்க் காலப் போக்கில் அக் குற்றங்கள் நீங்க உதவுவனவாம். ஆணவம் உயிரிடத்து அநாதியே இருப்பது. மாயை கன்மங்கள் இடையேகூடி இடையே நீங்கப் பெறுபவை. ஆதலின் மாயை கன்மங்களினும் ஆணவம் என்பது வேருயது எனத் தெளியத்தக்கதாம்.

### சகலாவத்தை

#### ஆணவம் நீங்க இறைவன் அருளுமாறு

37. புகலும்மலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை
பொருந்தியிடும் அரனருளால்; போதம், தீபம்
சகலம்எலாம் உடனுய ஆறு போலும்,

தரும்அருளே மலம்உயிர்கள் சாராமல் மறைக்கும்,
இகலிவரும் இவைஉணரின் இருள்வெளியாம் தன்மை,
எய்தும்வகை தன்செய்தி, இலங்கும் விந்துப்
பகர்வரிய உணர்வாகி ஒளிஆய் உள்ளப்
பான்மையினுல் ஒருநாதம் படரும் தானே.

[தெ-ரை] மேற்கூறிய ஆணவமலம் உயிரை மறைத்து நிற்றலினின்றும் நீக்குதற்காக இறையருளால் தூய மாயையின் காரியமாய நால்வகை வாக்குகளும், கலே முதலிய தத்துவங்களும் இடையே வந்து பொருந்தும். விளக்கு ஒளியானது அதைச் சேர்ந்த தண்டு தகழி நெய் திரி முதலிய பொருள்களுடன் கூடி ஒளிதருமாறு போல, உயிருப் இந்நால்வகை வாக்குகளேயும் இத்தத்துவங்களேயும் கொண்டு விளக்கம் பெறும். இவற்றைத் தந்து உய்விக்கும் திருவருளே உயிர்கள் அறிந்து செறியாதவாறு அவ்வாணவம் தகைத்து நிற்கும். இவ்வாறு மாறுபட்டு வரும் மலம் மாயைகளின் இயல்பை உணருமிடத்து இருளும் ஒளியும் போல்வதொரு தன்மையவாம். உயிர் அறிவைப் பொருந்தும் முறையும் அம் மாயா காரியங்களின் செயலும் என்ன எனில், அடிவயிற்றினின்றும் [மூலாதாரத்தினின்றும்] விளங்கும் விந்து தத்துவத்திலிருந்து சொலற்கரிய ஞானமாத்திரைக்கு ஏதுவாகியும் உடலினுள் ஒளியாய் விளங்கியும் உயிர் அறியும் அறிவிற்கு ஈடாக ஒப்பற்ற நுண்ணிய வாக்குத் தோன்றி கொப்பூழிடத்திற்குச் செல்லும்.

புகலும்மலம்- மேற்கூறிய ஆணவமலம். போதம்- உயிரது அறிவு. தீபம்- விளக்கு. சகலமெலாம்- (அவ்விளக்கின்) பகுதிகள் எல்லாம். பகுதிகளாவன; அதன் தண்டு தகழி நெய் திரி முதலாயினவாம். ஒளி விளங்குதற்கு விளக்கின் தண்டு தகழி முதலியன நிலேக்களனுதல் போல, உயிர் அறிவு பெறுதற்கும் இவ்வாக்குகளும் கலே முதலிய, தத்துவக் கூட்டும் நிலேக்களனுக விளங்கும். தன்னிலேயில் (கேவல நிலேயில்) இருந்த உயிர்க்கு அதன் மலமகல இக்கூட்டு நிலேயைத் (சகல நிலேயை) தந்துஉதவுபவன் இறைவனே யாவன். இகலி வரும்- மாறுபட்டு வரும். இவை ஆணவமும் மாயையும். ஆணவம் உயிரொடு கலந்து அதன் அறிவு இச்சை செயல்களே மறைக்கும். மாயை உடல் கருவி உலகுகளாய் உயிருக்கு வேருய் நின்று அதன் அறிவு இச்சை செயல்களே விளக்கும். ஆணவம் மறைக்கவும் மாயை விளக்கவும் செய்தலின் இவை தம்முள் மாறுபாடு உடையனவாம். ஒரு நாதம்- நுண்ணிய (சூக்கும) வாக்கு. உயிர் ஆணவத்தோடு கட்டுண்டு தன் செயலற்றுக் கிடக்கும் (கேவலம்) நிலேயில் இறைவன் தன் கருணேயைச் செலுத்துவன். அக் கருணே இரு திறனுக நின்று

உதவும். உயிர்க்கு வினைவயத்தாலாய நுகர்வுகளை நுகரச்செய்து அதன்வழி மெய்ம்மை இது என உணரச் செய்வது ஒன்று: பிறிதொன்று அம்மெய்ம்மை உணரப் பெற்ற உயிர் அவாவி நிற்கும் அருளைப் பெறுதற்குக் கருவியாக அருளறிவை உளவாக்குவது. இவ்விரு வகையில் உதவும் அருளை முறையே ஆதிசத்தி என்றும் சிற்சத்தி என்றும் கூறுவர். இவ் வகையில் தத்துவக் கூட்டை உயிர்க்கு அருளி நிற்பது ஆதி சத்தியாகும் அதன்வழி உயிர்க்கு அருள் ஞானத்தைப் பெறுதற்குத் துணை நிற்பது சிற்சத்தியாகும். தாயின் கருவில் உருவாகும்பொழுதே நம் உடம்பின் அடி வயிற்றில் ஒலியை உள்ளடக்கிக் கொண்டிருக்கும் விந்துசத்தி அமைக்கப் படுகிறது. ஒலி தோன்றுதற்கு மூலமாய் நிற்பது இதுவாகும். ஆதலின் இதனை ஒலி முதல் என்பர். இது இறையருளால் கிட்டுவதாகும். அடிவயிறு-மூலாதாரம். இவ்வமைப்பே வாக்குகள் தோன்றவும் அதன்வழி உயிர்க்குப் பகுத்துணர்வு உண்டாகவும் துணைபுரிவதாகும் இவ்வறிவு எழுச்சியால் உயிர் மனம் முதலிய அகக் கருவிகளைக் கூட நேருகிறது: அதன்வழி ஐந்தவத்தைகளை அடைகிறது. அவ்வழி உயிர் பெறும் அனுபவ அறிவே தத்துவ ஞானமாகும். அடி வயிற்றில் அடங்கி நிற்கும் அகவோசை கொப்பூழிற்கு வரும்போது புற ஓசையாக அமையும். 'உந்தி முதலா முந்துவளி தோன்றி' எனத் தொல்காப்பியம் கூறும் ஒலியும் இதுவாம். கலை முதலிய தத்துவக் கூட்டு உயிரது அறிவை ஓரளவு விளங்கச் செய்ய இவ்வொலி எழுச்சிகள் படிப்படியாக மிகுந்து மேலும் அதற்கு விளக்கம் அளிக்கின்றது. உயிரொடு பிணைந்து நிற்கும் ஆணவம் நீங்க இறைவன் இவ் வகையில் பேரருள் புரிகின்றான். இறைவன் அருளும் இவ்வருள் நிலை ஓதற்கரியதாகலின் 'பகர்வு அரிய உணர்வாகி' என்றார். உயிர் உய்தி பெறுதற்குரிய மெய்யுணர்வைத் தருதற்கு ஏதுவாய் நிற்றலின் 'ஒளியாய்' என்றார். உள்ளம்- உயிர். அதன் பான்மை யாவது அது படிப்படியாக உணர்தற்குரிய நிலையாம்.

பைசந்தி முதலிய வாக்குகளின் தொழில்.

38. வந்தடைந்து பின்னபாய் வன்னங்கள் தோற்றம்
வரும் அடைவு பட ஒடுக்கி மயிலண்ட சலம்நேர்
சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி; உயிரின்
சேர்ந்துவரும் அவைமருவும் உரு எவையும் தெரித்து
முந்தியிடும் செவியில் உறாது உள்உணர்வாய் ஓசை
முழங்கியிடும் மத்திமைதான்; வைகரியில் உதானன்
பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழி செவியின்
பால் அணைய நினைந்தபொருள் பகரும் தானே.

(தெ-ரை) மேற்கூறிய நுண்ணிய வாக்கு கொப்பூழைச் சார்ந்து எழுத்துக்கள் வேறுவேருகப் பிரிந்து தோன்றியிருக்கும் முறையை ஒடுக்கி மயிலின் முட்டையில் நீர் தங்கியிடும் முறைபோல நெஞ்சிடத்து இருதயத் தானத்தில் நிர்விகற்ப உணர்விற்கு ஏதுவாய் நிற்கும். அதுபொழுது அது பைசந்தி எனப்படும். பின் அவ்வாக்கானது மூச்சுக் காற்ருேடு கூடிவருகின்ற எழுத்துக்களாகப் பொருந்த நுண்ணிய வடிவுகள் எல்லாவற்றையும் வேறு வேருக விளக்கச் செவியில் கேளாது தான் மட்டும் உணர நிற்கும் மெல்லோசையாய்க் கழுத்தினிடத்து ஒலிக்கும். இவ்வொலி மத்திமை எனப்படும். உதானம் என்னும் காற்ருனது ஆணவத்தால் செலுத்தப்படும் உயிர்க் காற்றைக் கூடுவதால் வந்த வாக்குத் தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப்படும். தம் மனத்தின் நினைந்த ஒரு பொருளைச் சொல்பவனுக்கும் கேட்பவனுக்கும் சவிகற்ப உணர்வு உண்டாதற்கு ஏதுவாய்ச் செல்லும். அந்நிலையில் அது வைகரி எனப்படும்.

நிருவிகற்பம்- ஒரு பொருளின் பெயர் குணம் முதலியவற்றைப் பிரித்தறியாது அப்பொருளுண்மை மாத்திரையே அறிதலாம். சவிகற்ப உணர்வாவது ஒருபொருளின் பெயர் இனம் தன்மை செயல் பயன் ஆகிய ஐந்தையும் பகுத்தறிதலாம். பின்னமாய் - வேறுவேருய். வன்னங்கள்- எழுத்துக்கள். மயில் அண்டசலம்- மயிலின் முட்டையிடத்துக் காணும் நீர்; மயிலது முட்டையிலுள்ள நீர் அதிலிருந்து வெளிப்பட்டு வளரும் மயிலுக்கு உளவாய நிறங்கள் அனைத்தும் பொருந்தி இருக்கும். வளர்ச்சிக்குரிய நேரத்தில் அந் நிறங்கள் யாவும் அமைந்து விளக்கம் பெறும். ஆனல் நீராய் இருக்கும் நிலையில் அந் நிறங்களைக் காண்டல் இயலாது. இவ்வாறே வேறு வேருன எழுத்துக்கள் தோன்றுதற்குக் காரணமான ஒலியின் நுண்மை உளவாகி அமையும். அதுவே பைசந்தி என்பர்.

உயிரறிவின் வகையும் கலை வித்தைகளின் செயலும்

39 இத்தகைமை இறைஅருளால்உயிர் அறியும் அறிவுக்கு
ஈடாக வாடாதே ஈர்இரண்டின் உரைத்த
வித்தைமுதல் ஐவரான் விளங்கு ஞானம்
மேவியிடும் எனஉரைப்பர்; அசுத்தமாயை
வைத்தகலை தான்மூல மலம்சிறிதே நீங்கி
மருவும்வகை தெரிவிக்கும்; வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தை இடைநின்று அறிவை உயிர்க்குப்
பொருந்தியிடும்வகைபுணரும்; புனிதசத்தி புணர்ந்தே.

(தெ-ரை) இம்முறையில் சிவபரம்பொருளின் அருளால் உயிர் அறியும் அறிவுக்குத் தக்கவாறு தவிராமல் வரும் நால் வகை வாக்குகளினாலும் முன்னே கூறப்பெற்ற சுத்தவித்தை முதலிய ஐவகைத் தலைவரின் செயல்களாலும் விளங்குகின்ற பொருளை அறியும் அறிவு அவ்வுயிரிடத்துப் பொருந்தும் என அறிஞர் கூறுவர். எவ்வாறெனில் அசுத்த மாயையினிடமாகத் தோன்றிய கலையானது ஆணவத்தைச் சிறிது நீக்கிப் பொருள் உணர்வைப் பொருந்துமாறு செய்து உயிரது தொழிலாற்றலை விளக்கி நிற்கும். வித்தையானது பொறிகளின் வாயிலாகப் பொருந்தும் பொருளைப் புத்தி உறுதிப் படுத்தித் தன்னிடத்துக் கொடுக்க உயிர்க்கும் இப் புத்திக்கும் இடையே நின்று பொருளுணர்வை உயிர் பொருந்துமாறு உயிர்க்கு அறிவைச் சுட்டி நிற்கும். இவை சிவசக்தி உடனின்று நிகழ்வனவாம்.

நால்வகை வாக்குகளுள் வைகரி இருதிறப்படும். ஒன்று தன் தன்செவிக்கு மட்டும் கேட்கப்படுவது. இதனைச் சூக்கும வைகரி என்பர். பிறிதொன்று தன்செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப் படுவது. இதனைத் தூல வைகரி என்பர். இவ்வாக்குகள் ஐந்தும் இறைவனது தொழிலாற்றலால் செலுத்தப்பட்டு சுத்தசுத்துவங்கள் ஐந்திலும் இருக்கும் என்பர். சூக்குமை சிவதத்துவத்தில் இருக்கும். இதற்கு இடம் அடிவயிறும். பைசந்தி சத்தி தத்துவத்தில் இருக்கும். இதற்கு இடம் கொப்பூழாம். மத்திமை சாதாக்கிய தத்துவத்தில் இருக்கும். இதற்கு இடம் இதயமாம். சூக்கும வைகரி மகேசுவர தத்துவத்தில் இருக்கும். இதற்கு இடம் கழுத்தாம். தூலவைகரி சுத்த வித்தையிலிருக்கும். இதற்கு இடம் முகமாம். சத்தி தத்துவம் கலையை எழுப்பும். அக்கலை ஆணவமலத்தைச் சிறிது நீக்கி உயிரது தொழிலாற்றலை விளக்கி இருவினைக்கு ஈடாய் வரும் இன்பதுன்பங்களில் செலுத்தி நிற்கும். சுத்த வித்தை வித்தையை எழுப்பும். அவ்வித்தை உயிருக்கும் புத்திக்கும் இடையில் நின்று புத்தியின் வாயிலாக வரும் பொருள் நுகர்வுகளை உயிர் பொருந்துமாறு அறிவை உண்டாக்கும். கலை உயிரது தொழிலாற்றலையும், வித்தை உயிரது அறிவாற்றலையும் விளக்கி நிற்கும்.

**அராகம் நியதி காலம் என்னும் தத்துவங்களின் செயல்.**

40 பேசரிய அராகம், தம் கன்மத்துக்கு ஈடாப்
பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும்; நியதி
தேசமிகும் அரசர்தரும் ஆணை, செய்தி
செய்தவரைத் துய்பிக்கும் செய்தி போல
நேசமுறும் தம் கன்மம் நிச்சயித்து நிறுத்தும்;

நிகழ்காலம் கழிகாலம் எதிர்காலம் என்றே
ஓசை வரும் காலம் எல்லைபலம் புதுமை
உறுவிக்கும்; இறைசத்தி உடனாய் நின்றே.

(தெ-ரை) சொல்லுதற்கரிய அராக தத்துவமானது உயிர்கள் தம்முடைய வினைக்கிடாகப் பெற்ற நுகர்வில் இச்சையை மிகுவிக்கும். நியதி தத்துவமானது நாடுகளை மிகுதியாக உடைய அரசரால் கற்பிக்கப் பட்ட ஆணையானது, வினை செய்தவரின் தகைமைக் கேற்ப அவ்வினைப் பயனைத் தந்தருளும் முறைமை போல உயிர்கள் முன் விரும்பிய பொருளை விரும்பியாங்கு நுகர்விக்க உறுதி பண்ணி நிற்கும். கால தத்துவமானது இறப்பு நிகழ்வு எதிர்வு என மூவகைப் பட்டுக் கால எல்லைக்கேற்ப நுகருமாற்றைச் செய்யும். சிவசித்தி உடன் நிற்கவே இவை நிகழும்.

இறைவனது விருப்பாற்றல் ஈசுவர தத்துவத்தை எழுப்பும். அது அராகத்தை எழுப்பும். அவ் அராகம் உயிருக்கு இச்சையை எழுப்பும். அராகம்- விருப்பம். இறைவனது தொழிலாற்றல் சத்தி தத்துவத்தை எழுப்பும். அது காலம் நியதி ஆகிய இரண்டையும் எழுப்பும். காலம் உயிர்க்குரிய வினைப் பயனைக் கூட்டி நிற்கும். நியதி அவரவர் செய்த வினைப் பயனை அவரவரும் தவறாமலும் மிகுதி குறைவில்லாமலும் துய்க்கச் செய்யும். அரசனின் ஆணை உலகியல் உள்ளார்க்கு இவ்வகையில் உதவுதல் போல இறையருள் வழிப்பட்ட இந் நியதியும் இவ் வரையறையைச் செய்து தருகிறது. ஒரு பொருளின் பழைமையை உணர இறந்த காலத்தின் எல்லை தெரிய வரும். இன்று வேண்டுவதென்ன என அறிவது நிகழ் காலத்தின் பயனை அறிவதாகும். இனி என்ன நேருமோ என நினைவது எதிர்காலத்தின் புதுமையை உணர்த்துவதாகும். எனவே இறந்த காலம் எல்லையையும் நிகழ்காலம் பயனையும் எதிர்காலம் புதுமையையும் உணர்த்துவ தாகும் 'காலம் எல்லை பலம் புதுமை உறுவிக்கும்' என்பது இதுபற்றியேயாம். ஓசை தர வரும்- சொல்லப்பட்டு வரும்.

புருடனும் பிரகிருதியும்

41. ஐவகையால் உறுபயன்கள் நுகரவரும் காலம்
அதுபுருட தத்துவம்என்று அறைந்திடுவர் அறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனில்இதற்கும் சுத்தி
மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்பும்;
செய்வகையின் தொடர்ச்சி இங்குத் தோற்றுவிக்கும் குணத்தின்
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம்; அவைதாம்
இவ்வகையால் சாத்துவிக ராசததா மதமாய்
இயம்புவர்கள் ஒன்றிரண்டு குணம்ஏற்கை உடைத்தே;

(தெ-ரை) கலை வித்தை அராகம் நியதி காலம் என்னும் ஐந்தின் துணையால் தன்னிடத்துப் பொருந்த வரும் வினை விளைவை உயிர்

துய்க்கக் கருதும் நிலையில் அதனைப் புருட தத்துவம் என அறிஞர் கூறுவர். உடலில் ஐவகையான கலா சோதனை செய்யுமிடத்து இப் புருட தத்துவத்திற்கும் தூய்மை செய்யும் முறைமையினை விரும்பப் பட்ட ஆகம நூல்கள் கூறும் முன் செய்த இருவினைப் பயனால் வரும் இன்ப துன்பங்களை இப்பொழுது உண்டாக்கும் குணங்களின் கூட்ட மாகிய பிரகிருதியானது முக்குணம் உடையதாம். அவை தம் செயல் வகையால் சாத்துவிகம் இராசதம் தாமதம் என இயம்பு வார்கள். அவற்றுள் ஒவ்வொன்றும் இவ்விரண்டு குணங்களைப் பொருந்தும் இயல்பினை உடைத்தாம்.

உயிர் கலை முதலிய ஐவகைத் தத்துவங்களினாலும் கட்டப்பட்டு வினைப் பயனை நுகர்வதற்கு வலிமை பெற்றிருக்கும் நிலையில் அதனைப் புருடன் என்று கூறுவர். பஞ்ச கஞ்சுகன், புருடதத்துவம் என்றும் கூறுவர். பஞ்சகஞ்சுகன் – ஐவகைச் சட்டை அணிந்தவன். நாடக அரங்கில் வேடம் புனைந்து ஆட முற்படுவோன் தான் கொண்ட வேடத்திற்கு ஏற்பவே தான் ஆடுவன். அதைப் போலவே உயிரும் இவ் ஐவகைக் கூட்டும் பெற்ற நிலையில் அதற்கு ஏற்பவே அதன் அறிவு இச்சை செயல்கள் உளவாம். அவ் விளைவால் அறியாமை, ஆணவம், அவா, விழைவு, வெறுப்பு என்னும் ஐவகைக் குற்றமும் புரிந்து அல்லலுறும். வடநூலார் இவ் ஐவகைக் குற்றங்களையும் பஞ்சக்கிலேசம் என்பர். திருவள்ளுவனார் அகங்காரத்தை அறியாமை யின் கண்ணும், அவாவை விழைவின்கண்ணும் அடக்கிக் காமம் வெகுளி, மயக்கம் என மூன்றாய் அடக்குவர். ஞானாசிரியர் மாணாக் கருக்குத் தீக்கை செய்யும் பொழுது நிவர்த்தி முதலிய ஐங்கலை களையும் மாணாக்கரது உடலிலே ஐவகைப் படுத்தி அவ் வழிக் குற்றம் நீக்கச் செய்வர். அடி முதல் முழந்தாள் வரை நிவர்த்தி கலையின் எல்லையாகவும், முழந்தாள் முதல் கொப்பூழ் வரை பிரதிட்டா கலையின் எல்லையாகவும், கொப்பூழ் முதல் இருதயம் வரை வித்தியா கலையின் எல்லையாகவும், இருதயம் முதல் புருவம் வரை சாந்தி கலையின் எல்லையாகவும், புருவம் முதல் தலை வரை சாந்தி அதீத கலையின் எல்லையாகவும், கூறுப; இவ்வாறு தூய்மை செய்யுங்கால் இப் புருட தத்துவத்தையும் தூய்மை செய்வர். முக் குணங்களின் திரட்சிக் கட்டே பிரகிருதியாகும். சேர்வுபுரி - திரட்சியானகட்டு. முக்குணங்களும் விளங்காது அடங்கியிருக்கும் நிலையே இப் பிரகிருதி யாம். வித்தியா தத்துவங்களுள் ஒன்றாய மாயை என்பதும் இது. சாத்துவிகத்தில் சாத்துவிகம், இராசதம், தாமதம்; இராசதத்தில் இராசதம், தாமதம்; சாத்துவிகம்; தாமதத்தில் தாமதம் சாத்து விகம், இராசதம் என ஒன்பது வகையாகக் கூறுப. இம் மூன்றனுள் ஒவ்வொன்றிலும் ஏனைய இரு குணங்களும் பொருந்தி வருதலின் 'ஒன்று இரண்டு குணம் ஏற்கை உடைத்தே' என்றார்.

# திருவிளையாடல் புராணம்

உரைநடை

போர்க்களக் காட்சி

அப்போது வேட வடிவங் கொண்டு வந்த அண்ணலின் கணைகளால் வீரர்களின் தோள்களும் கால்களும் தலைகளும் அறுபட்டன; இறந்தவர்களின் உடல்கள் மண்ணிற் கிடந்தன; தும்பை மாலைகள் அறுந்தன; யானைகளும் குதிரைகளும் இறந்தன; தேர்கள் நொறுங்கின! இறவாது எஞ்சிய சேனைகள் ஓடி மறைந்தன.

பல தலைகள், உடலிலிருந்து உயிர் முன்னே செல்லத்தாமும் சூரிய மண்டலத்தின் வழியாக வீர சுவர்க்கம் செல்லுதற்குத் தாவுதல் போலத் துள்ளி ஆடும். அம்பும் வாளும் பட்டுக் கூவிக்கொண்டு கீழே வீழ்கின்ற கவந்தங்கள் (தலையற்ற உடல்கள்) ஆடக் குற்றுயிரோடு கூடிய உடல்கள் நின்று தாளம் போடுதல்போலக் கைகளைக் கொட்டுவன. தன்தலை தரையிலே வீழ வெட்டி வீழ்த்தியவனை விழாது நின்ற கவந்தம், கையிலிருக்கும் வேலால் குத்தித் தள்ளியது. அறுபட்ட தலைகள் குரவைப் பாட்டுப் பாடி, வாயினை மென்று பற்களைக் கடித்து வீழ்ந்து கறுவின. குறையுடல்கள் மார்பைத் தட்டி நிற்கும்: ஓரிடத்தில் அறுபட்டு வீழ்கின்ற இருதலைகள் ஒன்றற்கொன்று நோக்கிச் சிரித்து, ''பிரிவின்றி நீயும் வந்து விட்டாயே'' என்று நட்புமுறையிலே எதிரெதிரே பேசி அன்புமிக வேறு செய்திகளையும் கூறி ஒன்றையொன்று மோந்து பாடிநின்று ஆடின.

வானின் வழியே உலாவும் பருந்து, காகம், கழுகு முதலானவை போர்க்களத்தின்கண் இறந்து வீழ்ந்தவர்களின் உடல்களின்மேல் சிறகுகளை அடித்துக்கொண்டு அசைதல், வெப்பத்தைப் போக்கப் பக்கத்திலே நின்று விசிறியை அசைத்தலை ஒக்கும். பெரிய இரத்த வெள்ளத்தில் மிதந்து செல்லும் தேர்களைக் கொடிய பேயின் பிள்ளைகள் அவ்விரத்த வெள்ளத்ினுள் மூழ்கிக் கீழ் வழியே சென்று அத்தேர்களைக் கவிழ்த்தல், கடலின் மேல் ஓடும் மரக்கலங்களை வீழ்த்தும் சுறா மீன்களை ஒத்தன. மனத்தைத் தத்தம் வழி இழுக்கும் ஐம்பொறிகள் போல இறந்தவர் உடல்களைக் காகங்கள் கத்தி நின்று ஒரு பக்கம் இழுக்கும்; பருந்துகள் கொத்தி நின்று ஒரு பக்கம் இழுக்கும்; பூதக் கூட்டங்கள் வரிசையாக நின்று ஒரு பக்கம் இழுக்கும்; பேய்கள் மொய்த்து நின்று ஒரு பக்கம் இழுக்கும்.

வால் துடுப்பாகவும், இரு செவிகள் முறமாகவும், தந்தங்களிலிருந்து சிந்திய முத்துக்கள் அரிசியாகவும் கால்கள் உரலாகவும், தந்தங்கள் உலக்கையாகவும், கதுப்பு சமைக்கும் கலமாகவும், குருதி நெருப்பாகவும், மத்தகம் அடுப்பாகவும் திகழ, யானைகள் மடிந்த போர்க்களம் கொற்றவை சமைக்கும் மடைப்பள்ளியை ஒக்கும். ஒரு பூதம், வையை நீரை இரு கைகளாலும் தடுத்துக் குடித்த குண்டோதரன் என்னும் பூதம் போல், பிணங்களை அணையாக் கோலி இரத்த வெள்ளத்தைப் பெருக்கிக் குடிக்கும் பேய்க் கூட்டத்தை உதைத்துத் தள்ளி அவ்வணையை உடைத்துப் பெருகிவரும் இரத்த வெள்ளத்தை இரு கைகளாலும் தடுத்துப் பருகியது.

### சோழனின் துணை மன்னர்களும் மடிதல்

நச்சு மரத்தினை அழித்தற்பொருட்டு மூட்டும் எரியால் அதனைச் சார்ந்த சந்தன மரமும் அழிதல் போலச் சோழனைச் சார்ந்து துணையாக வந்த அயற்புல மன்னர் அனைவரும் சுந்தரப்பேர் அம்பினால் இறந்துபட்டனர்.[1] அப்போது பேய்கள் இறந்தவர்களை மலரில் மொய்க்கும் வண்டுகள் போலச் சூழ்ந்து மொய்த்தன. பருந்துகளும் காகங்களும் கழுகுகளும் பிணங்களைப் பிடித்து இழுத்து ஒன்றோடொன்று போர்புரியத் தொடங்கின.

### சோழன் தோற்று ஓடுதல்

வேட வடிவங்கொண்டு வந்த இறைவன் விடுத்த சுந்தரப் பேர் அம்பினாலே, வஞ்சினங் கூறிப் போருக்கு வந்துற்ற தனது சேனை அழிந்தமைகண்டு மயங்கி, எஞ்சிய சிறு சேனையும், பகைவர் இகழ்ச்சியும், வீரமின்மையும் தன்னைச் சூழச் சோழனும் தோற்று ஓடினான்.

### வேட வடிவங்கொண்டு வந்த சிவபெருமான் மறைதல்

இந்திர வில்லும் கரிய மேகமும் போலப் போர்க் களத்திலே வில்லேந்திக் கரிய உடலுடன் தோன்றிப் போர் புரிந்த சிவபெருமானாகிய வேட வீரர் பாண்டியனுடைய மலர்ந்த முகத்தை நோக்கி இருளோடு கூடி வந்த சந்திரன் போல அருள் நகை சிறிது புரிந்து மறைந்தருளினார்.

---

1. இங்கே, ''மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த, இனத்தால் இகழப் படுப;- புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, எறிபுனந் தீப்பட்டக் கால்'' என வரும் நாலடிச் செய்யுள் ஒப்பு நோக்கற்பாலது.

பாண்டியன் அரண்மனை அடைதல்

பின்பு வங்கிய சேகர பாண்டியன் வெற்றிச் சங்கைத் தன் வாயிலே வைத்து முழக்கி, யானை மேலேறி, மகளிர் [1]அட்டமங்கலங்களையும் ஏந்தத் தன் திருநகரின்கட் சென்றான்; தன் படைக்குச் சார்பாக வில் வீரராக வந்து வெற்றித்திருவை அளித்த சோமசுந்தரக் கடவுளுக்கு நிலையாகப் பூசனைப் பொருள்களை அளித்து, இரத்தினாபரணங்களும் ஒளி வீசும் மாணிக்கத்தால் இழைக்கப்பெற்ற வில்லும் சுந்தரப்பேர் எழுதிய அம்பும் செய்து சாத்தினான்; நீதி வழுவாமல் அறம் தழைத் தோங்க அரசுபுரிந்து கொண்டிருந்தான்.

செய்யுள்– 44
ஆகச் செய்யுள்– 2393

---

## 51. சங்கப்பலகை தந்த படலம்

கலைமகள் சாபம் அடைதல்

வங்கியசேகர பாண்டியனின் செங்கோல் நன்கு நடைபெறும் காலத்திலே, காசிப்பதியின்கண் பிரமதேவன் [2]பத்து அசுவமேதயாகத் தினைத் தேவர்கள் மகிழ வேதவிதிப்படி செய்து முடித்தான்; பின்னர் மறுநாள் நீராடும்பொருட்டுச் சரஸ்வதி, சாவித்திரி, காயத்திரி என்னும் மனைவியர் மூவரோடும் கங்கா நதியை நோக்கிச் செல்வானாயினன். அங்ஙனம் செல்லும் பொழுது சரசுவதி, வானின் வழியே செல்லும் ஒரு விஞ்சைமாது பாடுகின்ற இசை நெறியில் மனத்தைச் செலுத்தி நின்றாள். பிரமதேவன் கங்காநதிக் கரையை அடைந்து. சரசுவதியின் வரவு தாழ்த்தலினால் மற்றைய மனைவியர்கள் இருவரோடும் நீராடிக் கரையேறினான். அப்போது சரசுவதி வந்து, ''என்னையன்றி நீங்கள் மட்டும் நீராடியது என்னை?'' என்று கோபித்தாள். அதற்கு நான்முகன், ''குற்றம் உன்மேலதாக, நீ நம்மைக் கோபிப்பது என்னை? இத் தீங்கை எண்ணில்லாத மனிதப் பிறப்பெடுத்து ஒழிப்பாய்'

---

1. அட்டமங்கலம்– சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, தீபம், கொடி, இணைக்கயல் என்னும் எட்டுச் சுபப் பொருள்கள்.

2. இந்தப் பத்து அசுவமேத யாகம் செய்த இடம் காசியில் கங்கைக் கரையிலுள்ள 'தசாசுவமேத கட்டம்' ஆகும் இக்கட்டம் அறுபத்து நான்கு தீர்த்தக் கட்டங்களில் ஒன்றாகும்.

என்று சபித்தான். அச் சாபத்தை ஏற்ற கலைமகள் பயந்து நடுங்கிப் புலம்பி,"மனிதப்பிறப்பின் துன்பத்தை அறியாத உமக்கு உயிர்த்துணை ஆகும் யான இம் மனிதப் பிறப்படைந்து மயங்குவேனே!" என்றாள்.

அப்போது நான்முகன் கலைமகளின் துன்பம் நீங்கச் சிந்தித்து நோக்கி, "மாதே! நினது வடிவமாகிய முதலெழுத்து ஐம்பத்தொன்றினுள்ளே விளங்கும் ஆகார முதல் ஹாகாரம் இறுதியாகிய [1]நாற்பத்தெட்டுப் புலவர்களாகி நிலவுலகில் பலவேறு வகை வருணத்திலே அவதரிக்கக்கடவனவாக. அவ்வெழுத்துக்கள் அனைத்திலும் ஏறி நின்று அவ்வவ் வெழுத்துக்களின் மெய்யான தன்மையை அடைந்து வெவ்வேறாக இயக்குகின்ற அகரத்திற்குத் தலைமையாகிய கடவுள் திருவாலவாயின்கண் அமர்ந்தருளிய சோமசுந்தரக் கடவுளே[2]; ஆதலால் அவர், தாமும் ஒருசேர வீற்றிருந்து நாற்பத்தொன்பதாம் புலவராகி அப்புலவர்களுடைய உள்ளத்திலே நின்று அவரவர்க்கு அறிவைத் தோற்றுவித்து அரணாகப் புலமையைக் காத்தருளுவர்" என்று கூறினன்.

நாற்பத்தெட்டுப் புலவர்கள் தோற்றமும் தன்மையும்

பிரமதேவன் கட்டளைப்படியே ஆகார முதலிய நாற்பத்தெட்டு எழுத்துக்கள் வெவ்வேறு மக்களாய்ப் பிறக்க, அவர்கள் பல கலைகளின வகைகளைத் தெளிந்து சமஸ்கிருத மொழியையும், மற்றைய பதினெட்டு மொழிகளையும் ஆராய்ந்தறிந்து தமிழிலே தலைமைப் புலமையை அடைந்தார்கள்.[3] அவர்கள் பொன்னும் மணியும் கலந்த ஆபரணங்களை அன்றி உருத்திராட்ச மாலையும் பூண்டனர்; நிலாவொளிபோலும் திருவெண்ணீறு அணிந்தனர்; பாமாலையால் அன்றிப் பூமாலையினாலும் சிவபூசை செய்யும் தன்மையராயினர். இத்தகைய புகழ்பெற்ற இப் புலவர்கள் நாடுகள்தோறும் சென்று புலமையால் அங்குள்ளவர்களை வென்றுவென்று பொருநை (தாமிரபர்ணிநதி) வளங்கொழிக்கும் பாண்டி நாட்டின்கண் வந்து பாண்டியனின் நகரமாகிய மதுரையை நோக்கி வருவாராயினர்.

---

1. நாற்பத்தெட்டெழுத்து-வடமொழி உயிரெழுத்தில் ஆகாரம் முதலிய பதினைந்தும் சகரம் முதலிய முப்பத்து மூன்றும் ஆம்.

2. இங்கே, "அகர வுயிர்போல் அறிவாகி யெங்கும், நிகரிலிறை நிற்கும் நிறைந்து" என வரும் திருவருட்பயன் முதற் செய்யுள் சிந்திக்கற்பாலது.

3. இப்புலவர்களைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருத்தொண்டத் தொகையில், "பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்" என்று கூறுகின்றார்.

## இறைவன் புலவர் வடிவமாகச் சென்று அவர்களை அழைத்தல்

அப்போது பற்பல கலைப் பனுவலின் பயனுய் நின்ற ஞான மூர்த்தியும் ஆலவாய் அண்ணலுமாகிய சோமசுந்தரக் கடவுள் கல்வியும் கேள்வியும் நிறைந்த ஒரு புலவராகி அப்புலவர்களின் எதிரே சென்று, ''நீங்கள் யாவர்? எங்கு நின்றும் வருகின்றீர்கள்?'' என்று வினவியருளினர். அவர்கள், ''நாங்கள் புலவர்கள்; அடைந்தாரது பாவத்தைப் போக்கும் பொருநை சூழ்ந்த பாண்டி நாட்டினின்றும் வருகின்றேம்'' என்றூர்கள். தனியே வந்த புலவராகிய ஞானமூர்த்தி, ''நீங்கள் இனிய தமிழ் வளரும் ஆலவாயிலே எழுந்தருளிய எமது கருணை மூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடியினை வணங்கல் வேண்டும்; ஆதலால் இப்பொழுதே வரக் கடவீர்'' என்று கூறியருள, அப் புலவர்கள், ''எங்களுக்கு அளவில்லாத வினைகளைத் தீர்த்தருளும் சோமசுந்தரக் கடவுள் தாங்களே'' என்றனர். பிறகு சோமசுந்தரக்கடவுள் அப்புலவர்களை அழைத்துக்கொண்டு மதுரையை அடைந்து ஆலவாய் அண்ணலை வணங்குவித்து மறைந்தருளினர்;

புலவர்கள், ஆச்சரியமடைந்து, ''இது பிறை முடியை மறைத்து வந்த பெருமானின் அருட்செயல்'' எனத் தெளிந்து சோமசுந்தரக் கடவுளை வெவ்வேறு செய்யுட்களினுலே துதித்துப் புகழ்ந்து வணங்கிக் கொண்டு வங்கியசேகர பாண்டியனைப் போய்க் கண்டனர்

## பாண்டியன் நாற்பத்தெட்டுப் புலவர்களை ஆதரித்தல்

வங்கியசேகர பாண்டியன், தன்னிடம் வந்த புலவர்களின் அறம் நிறைந்த கல்வியொழுக்கங்களையும் தகுதிகளையும் கண்டு, ''இவர்கள் சிறந்த சான்றோர்கள்'' என்று கருதி மனமகிழ்ந்து அவர்களுக்குப் பற்பல வரிசைகளைக் கொடுத்துச் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலுக்கு வடமேற்றிசையிலே ஒரு சங்க மண்டபம் அமைத்து அதில் அவர்களை இருத்தினன்.

அதுகண்ட முன்னைப் புலவர்கள் மனம் புழுங்கி அச் சங்கப் புலவர்களோடு வந்து வாது செய்து, தங்கள் ஆற்றல் குன்ற முன்னுள்ள புலமையும் மதிப்பும் இழந்து வருந்திச் சென்றனர். இவர்களைப் போலவே அயல் நாட்டுப் புலவர்களும் செருக்குடன் பலமுறை வந்து வந்து வினவி வாதிக்க அவர்களின் மனத்திட்பமுங் கெடும்படி சங்கப் புலவர்கள் வென்று விளங்கினர்.

### சங்கப் புலவர்கள் இறைவனிடம் சங்கப் பலகை பெறுதல்

ஒரு நாள் சங்கப் புலவர்கள் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று முறைப்படி வணங்கி, ''எம்பெருமானே! எம்மோடு தொடர்ச்சியாக வந்து வந்து எவரும் வாதம் செய்கின்றனர்; ஆதலால் புலமையை உள்ளபடி சீதூக்கி அளக்குங்கருவியாக ஒரு சங்கப் பலகை அடியேங்களுக்குத் தந்தருளுவாயாக'' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அன்று தம்மைப்பாடிய பாணபத்திரனுக்குத்தாமாகவே வலிந்து பலகை அருளிய சோமசுந்தரக் கடவுள், இப் புலவர்கள் தாமே ஒரு பலகையை வேண்டினுல் அதனைத் தாராதிருப்பரோ? இரார். ஆதலால், இறைவர் ஒரு புலவர் வடிவங்கொண்டு ஒரு பலகையுடன் எழுந்தருளிவந்து, ''புலவர்காள்! ஒரு முழச் சதுர அளவுள்ள இப்பலகை சந்திரனிலும் வெள்ளியது; அல்லது அறிவினும் தூயது; மந்திரவலியையுடையது; அறிவால் முதிய நும்போன்ஹோர்க் கெல்லாம் ஒவ்வொரு முழமாக வளர்ந்து இருக்கை அளிக்கவல்லது. இஃது உங்களுக்கு அளவு கோலாய் இருக்கும்'' என்று கூறி, நாமகள் உருவாய் வந்து அந் நாவலர்களுக்கு வெண்டாமரையாகிய தவிசினை ஒரு பலகையாகச் செய்து தருவதுபோல அப் பலகையினைக் கொடுத் தருளினுர்.

### சங்கப் பலகைக்கு வழிபாடு செய்து அதில் ஏறுதல்

சங்கப் புலவர்கள் அப் பலகையை வாங்கிக்கொண்டு திருக் கோயிலை வலம் வந்து தங்கள் சங்க மண்டபத்திற் புகுந்து அப் பலகைக்கு மணமிக்க பூமாலைகளைத் தொங்கவிட்டுப் பனிநீர் தோய்ந்த சந்தனக் குழம்பும், வெண்மலரும், வெள்ளாடையும் புனைந்து, நறும் புகையும், தீபமுங்காட்டிப் பூசை புரிந்து வணங்கினர். பிறகு சங்கப் பலகையில் நக்கீரன் முன்னர் ஏறினுன்; அதன் பின் கபிலனும் அதன் பின் பரணனும் ஏறினர்; மற்றைப் புலவர்கள் அனைவரும் இங்ஙனமே ஏறி ஏறி ஒருசேர வீற்றிருந்தனர். தன் உரை காண்பார் அனைவருக்கும் எழுந்தால் சுருங்கி நின்று பொருள் விரிவு காட்டித் தோன்றும் நூலைப்போல இறைவன் தந்தருளிய சிறிய பலகை ஒன்றே ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு முழமாக வளர்ந்து இடங்கொடுத்தது.

தெய்வப் பலகை பெற்ற அச் சங்கப் புலவர்கள் நூல்களில் அமைந்த பொருள் விளங்கத் தம்மில் ஏதுவும், உதாரணமும்,

எழுவகை மதமும் கூறும்போது அயற்றைக் கேட்டுத் தெளிந்த கிளியும், நாகணவாய்ப் பறவையுமே வெளியே வந்து, வாதஞ் செய்வார்கள் வந்தால் அவர்கள் கொள்கையை மறுத்துத் தங்கள் கொள்கையை நிலைநாட்டும்[1] எனில் அப்புலவர்களின் பெருமை அளத்தற்கரியதாம்.

இறைவன் புலவர்களின் மயக்கந் தீர்த்துத் தலைமை தாங்கல்

அந் நாற்பத்தெட்டுச் சங்கப் புலவர்களும் தங்கள் தங்கள் புலமையினாலே எண்ணில்லாத தூய பாடல்களைச் செய்துகொண்டு தத்தம் இச்சை வழியே இருந்தனர் அவர்கள் செய்த பாட்டுக்கள் அனைத்தும் உரை காண்போர் அறிவிற்கேற்றவாறு விரியும் பொருள் வளமும், சொல்வளமும், குறிப்பில் தோன்றும் பொருள்வளமும் ஒற்றுமையுடையனவாய் வேறுபாடு அறிய முடியாது தலைமயங்கிக் கிடந்தன. அதனால், அவர்கள் ஒவ்வொருவரும் வேறுபாடறியாது தம்முள் விபப்புற்று ''இஃது என்னுடைய பாடல்; அஃது உம்முடைய பாடல்'' என்று நேரே மாறுபாடு கொண்டனர்

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் அப் புலவர்கள் முன் அருளுகின்ற ஒரு புலவராய் வந்து தோன்றினார். அங்ஙனம் வந்த புலவராகிய இறைவர், தம்மை வணங்கி வரவேற்கும் புலவர்களை நோக்கி, ''புலவர்காள்! உங்கட்கு மயக்கத்தைத் தரும் செய்யுட்களைக் கொண்டுவாருங்கள்'' என்று அருளிச்செய்ய, அவர்கள், ''எந்தையே! இங்குள்ள இவையே ஆம்'' என அவற்றைக் கொண்டு வந்து திருமுன் வைத்தனர். தூய சொல்லும் தொடர்ந்த பொருளுமாகிய அந் நால்வர் பெருமான் அவற்றை ஆராய்ந்து அவ்வப் புலவர்களின் பாடல்களை அவ்வவர் கையில் மனம் மகிழுமாறு எடுத்துக் கொடுத்தருளினார். அவற்றை வாங்கிய சங்கப் புலவர்கள் மனமகிழ்ந்து, ''நீர் எங்களோடும் ஒரு புலவராய் இங்கு எழுந்தருள்க!'' என்று வேண்டிக்கொண்டு அவரைத் தங்களைத் தாங்கும்

---

1. இங்கு, ''பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு, வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே'' (திருஞான சம்பந்தர் தேவாரம்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

சங்கப் பலகையில் இருத்தினார்கள். பொற்பலகை என்னும் பொன்னாரத்தில் நாற்பத்தெட்டுப் புலவர்களும் சுற்றிலும் பதித்த மணிகளாக இருந்தனர். இறைவராகிய புலவர் நடுநாயகமணி என்னும்படி வீற்றிருந்தார்.[1]

பொன்னின் பீடிகை என்னும்பொன் னாரமேல்
துன்னு நாவலர் சூழ்மணி யாகவே
மன்னி னார்நடு நாயக மாமணி
என்ன வீற்றிருந் தார்மது ரேசரே.

வங்கிய சேகர பாண்டியன் சிவபதம் அடைதல்

இறைவரோடும் நாற்பத்தொன்பதின்மர் என்று கூறப்படும் புலவர்கள் அனைவரும் பின்னும் பற்பல தமிழ் நூல்களைச் செய்து கொண்டு அங்கு வாழும் நாளிலே, வங்கியசேகர பாண்டியன் வங்கிய சூடாமணிக்கு முடிசூட்டிப் புவியாட்சியை அளித்து இம்மையில் அமைந்த [2]வினைப்பாசம் என்னும் பகைமை கெட இருந்து, சிவபெருமான் திருவடியிற் கலத்தலாகிய வீடுபேற்றை அடைந்தனன்.

செய்யுள்—39

ஆகச் செய்யுள்—2432

——oo——

1. இறைவர் சங்கப் புலவருள் ஒருவராய் எழுந்தருளியதை, ''சென்றணைந்து மதுரையினில் திருந்தியநூற் சங்கத்துள், அன்றிருந்து தமிழா ராய்ந்தருளியவங் கணர்'' என வரும் திருத்தொண்டர் புராணம் - திருநாவுக்கரசர் புராணம் (403) அடிகளால் அறியலாம்;

2. வினைப்பாசம் - வினைக்கயிறு; ''பாசமாம் வினைப் பற்றறுப்பான்'' என்பது பெரிய புராணம்.

